றம் பொருட்டுச் செய்யப் பட்டமையின் இஃதிப் பெயரேற்றது. இதற்கு அருமபதவுரையொன்றும், அடியார்க்கு நல்லாருரை யொன்றுமாக இரண்டுரைகள் நிலவுகின்றன இதில் விளக்குஞ் சரிதையைக் கோவலனிற்காண்க.

சிலம்பாறு—அழகர் மலையிலுள்ள ஒராறு. இதற்கு நூபுரகங்கை யெனறும் பெயர் [சிலப்]

சிலாதன்—ஒரிருடி. நந்தீசுவரர்பிதா.

சிவகங்கை—(1) திருக்கைலாயகிரியிலுள்ள ஒருதீர்த்தம் (2) சிதம்பரத்திலுள்ள பத்துத்தீர்த்தங்களிலொன்று. இதில் மூழ்கியே கௌடதேசாதிபதியான சிங்கவன்மன் இரணியவன்மனாயினன். சிங்கவன்மனிற் காண்க.

சிவகலையம்மை—திருவெண்காட்டடிகளாகிய பட்டினத்துப் பிள்ளையார் மனைவி.

சிவகாமியம்மை—(1) சிதம்பரத்தில் நடராஜப் பெருமான் தேவியார் திருநாமம். (2) திருப்புத் தூரில் உமாதேவியார் திருநாமம்.

சிவகோசரியார்—கண்ணப்ப நாயனார் திருத்தொண்டு செய்து முத்தியடைந்தகாலத்தில் காளத்தி நாதருக்கு அர்ச்சகராயிருந்து அவரதுபக்தியைக் காணுற்ற ஆதிசைவர்.

சிவசன்மன்—மதுரா புரியி லிருந்த ஒருவேதியன். சப்தபுரிகளும் யாத்திரைசெய்யு நியமனத்துடன் சென்று வருகையில், ஏகாதசி விரதமிருந்து பாரணஞ் செய்கையில் இறந்துபட்டு விஷ்ணு கணாதர்களால் பலதேவருலகுகளையும் வைகுந்தத்தையும் காட்ட, இறுதியில் சிவதரிசனஞ்செய்து முத்தியடைந்தவன். [காசிகண்]

சிவசிவவெண்பா— சென்ன மல்லையரென்பவராற் செய்யப்பட்ட நூறு வெண்பாக்களாலாயது. இது சிவஞான யோகிகளியற்றிய சோமேசவெண்பாவைப் போல முதலிருவரிகளிற் சிவசரிதையும், பின்னிருவரிகளில் அதற்கியைந்த திருக்குறள் வெண்பாவுமாகவுள்ளது.

சிவஞானசித்தியார்—சித்தாந்த சாஸ்திரங்கள் பதினான்கனு ளொன்று. இது அருணந்தி சிவாசாரியரால் 308 விருத்தங்களா லருளிச் செய்யப்பட்டது. சிவஞான போதத்திற்கு வழிநூலாகவும், பரபக்ஷம் சுபக்ஷமென இருபக்ஷமாகவும், பதிபசுபாச விலக்கணங்களைக்கடாவிடைகளால் விளக்குவதாகவு முள்ளது. பதிஞானத்தை நன்கு அடைவிக்கவல்லநூல். இதற்கு மறைஞான சம்பந்தர் சிவாக்கிரயோகிகள் சிவஞானயோகிகள் நிரம்பவழகியார் துறைசைச் சுப்பிரமணிய தேசிகரெனு மிவர்கள் உரை செய்தனர். அன்றியும் ஞானப்பிரகாசர் சிவசமவாதமாக ஒருரைசெய்தனர்.

சிவஞானபோதம்—இரௌரவாகமத்தின் ஒருகூறுயுள்ளது. இது வடமொழியில் திருநந்தி தேவராலும் தென்மொழியில் மெய்கண்ட சிவாசாரியராலும் இயற்றப் பட்டது. சித்தாந்த சாத்திரம் பதினான்கனுள் தலைமையா யுள்ளது. பன்னிருசூத்திரங்களை யுடையது. இதற்குத் துறைசைச் சிவஞான யோகிகள் சிற்றுரையும் திராவிடமகா பாஷியமுஞ் செய்துள்ளார்.

சிவஞானயோகிகள்— திருவாவடுதுறைத்திருமடத்தில் சுமார் நூற்றுநாற்பது வருடங்கட்கு முன்னிருந்த ஒருபெரியவர். இவர் வடமொழிக் கடலையுந் தென்மொழிக் கடலையும் நிலைகண்டுணர்ந்தவர். இவர் சிவஞானபோதத்திற்குச்சிற்றுரையும் திராவிட மகா பாஷியமும், தொல்காப்பியச் சூத்திர விருத்தியும், தருக்க சங்கிரகமாகிய அன்னம்பட்டீயம் சிவதத்துவ விவேக முதலியவற்றின் மொழி பெயர்ப்பும், இலக்கண விளக்கச் சூறாவளியும், கம்பராமாயண சங்கோத்தர விருத்தியும், காஞ்சிப்புராண முதற் காண்டம் முதலியனவுஞ்செய்தவர். தருக்க வியாகரண முதலியவற்றில் ஒப்பாருமிக்காரு மின்றிச் சிறந்தவர்.

சிவஞானவள்ளலார்—வள்ளலார்சாத்திரமெனு நூலாசிரியர்.

சிவதத்தம்—சுதரிசனம். விஷ்ணுவின் சக்கராயுதம் - சிவ பெருமானாற் கொடுக்கப்பட்டது எனப் பொருள்படும்.

சிவதருமம்—உப புராணங்கள் பதினெட்டனுளொன்று.

சிவதருமோத்தரம்—மறைஞான சம்பந்தநாயனாரால் தமிழில் மொழி பெயர்க்கப் பட்டது. இது பரமதருமாதி சிவஞானதான ஐவகையாக பலவிசேஷ காரண சிவதரும பாவ சுவர்க்கநரக சனனமரண சுவர்க்க நரகசேட ஞானயோக பரிகார கோபுரவியல்களெனப் பன்னீரியல்களாக விளங்கும்.

சிவநேசர்—திருமயிலையில் வணிகர் மரபிலுதித்த சிவபக்தர். இவர் தம் புதல்வியைத் திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்குத் தந் திரவியத்துடன் கொடுக்க வைத்திருந்து ஒரு நாள் அக்கன்னிகை அராத்தீண்டி மருந்து மந்திர முதலிய வற்றாற் குணப்படாதிறப்ப, இவர் அக்கன்னிகையைத் தகனஞ்செய்து அவ்வெலும்பினை ஒருபாண்டத்திற் சேமித்துவைத்துத் திருஞான சம்பந்தசுவாமிகள் திருமயிலைக் கெழுந்தருளியபொழுது அவர் முன்னிட்டு அவர் திருவாய்மலர்ந்தருளிய பதிகத்தால் அக்கன்னிகை அக்குடத்தினின்றும் அங்கம் பூம்பாவையெனும் பெயரோடெழுந்து வரப்பெற்றவர். திருஞான சம்பந்தப்பெருமான் அக்குமாரியை மகண்மை கொண்டு வாழ்த்திச்சென்றனர்.

சிவபராக்கிரமம்—இது சிவபெருமானது அநந்தகல்யாண குணங்களை விளக்குவதாயும் அவரது முக்கியமான அறுபத்துநான்கு மூர்த்தங்களை விளங்கக்கூறுவதாயுமுள்ளது அவற்றை அஷ்டாஷ்ட மூர்த்தத் திற்சாணக. இந்நூல் செவ்வியதமிழ்வசனநடையில் வேதாகமாதிபிரபல வடமொழிப்பிரமாணங்களோடும் சிற்பநூல் விதிப்படியமைந்த திருவுருவப் படங்களோடும் விளங்குகிறது.

சிவபிரான்— அண்டாண்டபிரமாண்டங்கட்கும் பஞ்சகிருத்தியகாரணராக விளங்கும் முழுமுதற்கடவுள். இவ்விறைவனே சுகத்தைக்கொடுப்பவனும் சுகத்துக் கிருப்பிடமாயுள்ளவனுமாகலின் சங்கரன் சம்பு; எப்பொழுதும் மங்கலமாயுள்ளவனாகலின் சிவன் சதாசிவன்; பிர

மாதி தேவர்களிறந்த மாமயானத்தின்கண்ணே பூதபிசாசங்கள் சூழ நடிப்பவனாகலின்பேயோட்டாடி ஈமத்தாடி; திருமாலின் வாகனமாகிய கருடனுக்கஞ்சித் தம்மிடத்தடைக்கலம் புக்க செம்பாம்புகளையும், தாருவனமுனிவர் அபிசாரவேள்வியின்றுவிடுத்த கரும்பாம்புகளையுமணிந்தவனாகலின் அரவாபரணன்; உலகெங்குந் துன்புசெய்துழன்ற முப்புரங்களைச் சிரித்தெரித்தமையின் புராரி; பஞ்சபூதங்கட்கும் பூதப்பிரமதகணங்கட்குந் தலைவனுகலின் பூதநாதன்; கங்கையைச் சடையினணிந்தமையின் கங்காதரன், ஜடாசூடனாகலின் ஜடி; வாமனனது முதுகெலும்பை திருக்கரததுடைமையின் கங்காளன், உமாதேவியைப் பிரியாது அர்த்தசரீரத்துடைமையின் மாதுபாகன்; யாவர்க்கும் முழுமுதற் கடவுளாகலின் ஆதி; பாற் கடலைத் தேவாசுரர் கடைந்த பொழுது அதிலுதித்து அகிலவுலகையும்அழிக்கவந்தஆலாலத்தையுண்டு அனைவரையும் புரந்தமையின் நீலகண்டன் காளகண்டன்; மேருமலையை வில்லாகக் கொண்டமையின் குன்றவில்லி; இச்சைஞானக்கிரியை யென்னும் மூவிலைச் சூலமேந்தினமையின் சூலி; பசுக்கட்கெல்லாம் பதியாகலின் பசுபதி; மார்க்கண்டேயருக்காகக் காலனுக்குங் காலனானமையின் காலகாலன்; பிரமகபாலத்தைக்கொய்து கையிலமைத்திருந்தமையின் கபாலி; எக்காலத்துமழியாதிருத்தலின்நித்தன்; ஈசான தற்புருஷ அகோர வாமதேவ சத்யோஜாதமெனுந் திருமுகங்களைத் துடனுண்மையின்ஐம்முகன்; பரசு கையிலேற்றமையின் பரசுபாணி; சூரியசோமாக்கினிகளாகிய முச்சுடர்களை விழியாக வுடைமையின் திரிநேத்திரன்; சர்வசங்காரகாலத்தில் யாவுமெரியுமயானத்தில் நடிப்பவனாகலின்அழலாடி ஈமத்தாடி; பாண்டரங்கமென்னுங் கூத்தைச் செய்தலின் பாண்டரங்கன், சந்திரகலையைச் சிரமிசையணிந்துள்ளமையின் சந்திரசேகரன்; தனக்குத்தானே பரமாயுள்ளவனாகலின் தற்பரன்; கற்பாந்தத்தில் பிரமாதி தேவர்களைச் சூலநுனியிற் குத்தி நெற்றிவிழியால் நீறுசெய்து அவர்கள் உச்சீவிக்கும்படி தன்மீது பூசுதலின் நீறணிந்தோன்; ஐசுவரியங்களை யெல்லா மருளுதலின் ஈசுவரன்; தருமதேவதையை இடபமாக ஊருதலின் இடபவாகனன்; திக்குகளையே யாடையாக வுடைமையின் நக்கன்; மானைக்கரத்தில் ஏற்றமையின் மானேந்தி; யோகத்தாலும் ஞானத்தாலும் அறியக்கூடியவனாகலின் யோகி ஞானி; சோதிசொரூபனாகலின்சோதி; அகந்தையுள்ள காலத்தில் பிரமவிஷ்ணுக்களுக்கெட்டப் படாமையின் பிரமன்மாற் கரியோன்; தாணு; பிநாகமென்னும் வில்லைத்தாங்கினமையின் பிநாகபாணி; அடைந்தவருடைய பாவங்களை ஹரணஞ்செய்தலின் ஹரன்; என இத்தகைய பலகாரணத் திருநாமங்களைக் கணக்கின்றி யுடையவர். சிவபெருமானது பிரபாவங்களையெல்லாமெடுத்தெழுத இன்னாளும் இடந்தராது

மானுடராயுளும்போதாது. அவற்றை வேதபுராணாதிகளிலும் வல்லார்வாயும் உணர்க. சிவபிரானே கடவுளென வழிபடுவோர் சைவர். சிவபுராணங்கள் பத்து. சிவபுராணத்திற் காண்க. சிவனை வழிபடுஞ் சைவ சமயிகளுக்கு ஆதாரமான ஆகமங்கள் இருபத்தெட்டு.

சிவபெருமானுக்கு "நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன், புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்" என்றபடி அஷ்டமூர்த்தங்களேயன்றி, பஞ்சவிம்சதி (25)மூர்த்தங்களும், அஷ்டாஷ்ட (64) மூர்த்தங்களுமாம். அவற்றை விரிவடிவிற் காண்க.

சிவபுரம்—காசி.

சிவபுராணங்கள் — சிவசம்பந்தமான பிரபாவங்களைக் கூறிச் சிவனே பதியெனநாட்டும் சைவபுராணம்-பவிஷியபுராணம் - மார்க்கண்டேயபுராணம் - இலிங்க புராணம் - காந்தபுராணம் - வராகபுராணம் - வாமனபுராணம் - மச்சபுராணம் - கூர்மபுராணம்-பிரமாண்டபுராணமெனும் பத்துமாம். இப்பத்தின் மொத்தக்கிரந்த சங்கியை இரண்டிலக்ஷத் தறுபத் தெண்ணாயிரம். இவை பத்தும் சாத்துவிக புராணங்கள். சத்துவகுணம் வெண்ணிறமுடையதும், சுகத்திற்கும் ஞானத்திற்கும் இடமாயுள்ளதுமாம். யோகிகளுக்கு ஞானோபதேசஞ் செய்யுஞ் சிவபெருமான் தெளிபளிங்கு வடிவினராய்என்றுமுறங்காதபிராமணுதிபதியா யிருத்தல்காண்க.

சிவபுராணம் } பதினெண்மகாபுரா
சைவபுராணம் } ணங்களி லொன்று.

சிவபுராணம் பத்தனு ளொன்றுமாம். இது ஞானசங்கிதை ருத்திரசங்கிதை கைலாசசங்கிதை சநற்குமாரசங்கிதை வாயுசங்கிதை விந்தியேசுரசங்கிதையெனும் ஆறுசங்கிதைகளும் 224 அத்தியாயங்களும் இருபத்து நான்காயிரங் கிரந்தங்களுமாகவுள்ளது, இது இலக்ஷங்கிரந்தமுடையதெனவும் அந்நூலிற்கூறப்பட்டுளது. சிவபாரம்மியஞ் செப்புவதொருநூல்.

சிவப்பிரகாசசுவாமிகள் — (1) கும்பகோணத்தில் வேளாண் மரபிலே தோன்றி ஏழு வயதில் இலக்கிய இலக்கணப்பயிற்சியும், ஞானசாத்திராப்பியாசமுமுடையராய்ப் புண்ணிய ஸ்தலயாத்திரை செய்யப்புறப்பட்டு, திருவாவடுதுறை யடைந்து நமச்சிவாயமூர்த்திகளைத் தரிசித்து அவரால் சிவதருமணி யெனும் நைட்டிகதீக்ஷையும் சித்தாந்த உபதேசமும் பெற்று, அவ்வாதீன கர்த்தராக நியமிக்கப்பட்டவர். ஒருகாலத்தில் சிதம்பரத்திலே சிவலிங்கமும், திருவாவடுதுறையில் பொற்றாளமும் சிவபிரானாலே கொடுக்கப்பெற்றவர். சிதம்பரபூஜை புறச்சமயிகளால் முட்டுப்பட்ட பொழுது மைசூர் மன்னனைக் காணும்படி புறப்படுகையில் சிவிகை முதலியன இறைவனாலேயேகொடுக்கப் பெற்றவர். மைசூரரசனைக் காணச் சென்றவிடத்துத் தமதான்மார்த்த லிங்கத்தைத் தாரணஞ் செய்து கொண்டு வீரசைவராகித் தங்கருத்தை நிறைவேற்றி, அரசன் விரும்பியபடி அதைப் பொறுத்து வித்தவர். துறையூர் இளைவசக இலிங்கத்துறை

யாத்திரை செய்து திரும்புகையில், தன்தமையனிறந்தசெய்தியைக் கேட்டு, விரைந்து செல்லவேண்டியகாலத்தில், வழியில் பெண்ணையாறு மிகப் பெருகியிருந்தமையின் அவனுக்கு விபூதி யளித்து முழங்கால் ஜலமாகச்செய்வித்தவர். குருதரிசனத்திற் காக திருவாவடுதுறைக்குச் செல்லுகையில், திருச்சிராப்பள்ளிக் கருகே பத்தக்கட்டெண்ணெ யில்லையென, காவிரிநீரைச் சொரியவென் றெரித்தவர். திருச்சோற்றுத் துறையில் ஒரு குட்ட ரோகிக்குத் தம்பலத்தைக் கொடுத்து நோய்தவிர்த்துத் தமது பரிசனரி லொருவனுக்கியவர். சோழராச னொருவனுக்கு விபூதியால் பிரமகத்தி தோஷத்தை யொழித்தவர். ஆதிசைவ வேதியச் சிறுவனொருவன் விஷத்தாலிறக்க மயானங்கொண்டு செல்பவர்கள் அலறுவதுகண்டு அப்பிரேதத்தை யெனக்குத் தருகவெனக் கேட்டுப் பெற்று, ஞானக்கூத்தா வெழுந்திரு என்றெழுப்பித் திரு வண்ணாமலையாதீனகுருத்துவாபிஷேகஞ் செய்வித்தவர். திருச்செங் கோட்டில் சிலர் வேண்டுகோளின்படி "வில்லார் பொதுச்சபையின் வித்தகா நீயுமுன்னர், கல்லானைக்குக்கரும்பருத்திக் காட்டியவுன்—வல்லாண்மை, கட்டுரையே யாகவிந்தக் கல்லேறெறிஇக்கடலே, இட்டவிவர் முன்றினச்செய் யே" எனக்கூறிச் சந்நிதானத்திலிருந்த கல்விடபம் எழுந்திருக்கக் கடலையையுண்பித்தவர். இன்னோரன்ன அற்புதங்களையும், அத்துவித வெண்பா முதலிய பல நூல்களையு மியற்றியவர். ஒருநாள் ஆன்மார்த்த பூஜைமுடித்து நிராமிசைகூப்பிய கையராய்ச் சிவத்தியானஞ் செய்துகொண் டிருக்கையில் பூமிவெடித்து ஒளிப்பிழம்பு தோன்ற அதில் மறைந் தருளியவர். இவரைச் சித்தர் சிவப் பிரகாசரென்பார்கள்.

(2) வித்வான் சிவப்பிரகாச ரென்றும, துறை மங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளென்றுஞ் சொல்லப்பட்டவர். இவர்சகோதரர்கள்வேலையர் கருணைப்பிரகாசர். சகோதரி வேலம்மை. இவர் வீரசைவர். இலக்கண இலக்கியங்களில் வல்லவர். பிரமசரியமே மேற் கொண்டவர். பிரபுலிங்கலீலை சித்தாந்தசிகாமணி வேதாந்தசூடாமணி சிவப்பிரகாசவிகாசம சிவநாமமகிமைசெங்கைக் கோவை வெங்கையுலா பிக்ஷாடன நவமணிமாலை நால்வர் நான்மணி மாலை பழமலை யந்தாதி நன்னெறி முதலிய பலநூல்களைச் செய்தவர். இம்மூன்றுசகோதரர்களும் ஒருசேரச்செய்தது சீகாளத்தி புராணம்.

(3) திருவாரூரி லிருந்தஒருவைதிகசைவர். கோவசதமெனு மூரில் ஒரு புதரில் நிஷ்டைகூடி யிருக்கையில் தன்னை வந்தடுத்த சொருபானந்தரை மாணவராகக் கொண்டுபதேசித்தவர். இச்சொருபானந்தரின் மைத்துனரும் மாணவரு மாகிய தத்துவராயரே பாடுதுறைமுதலியன பாடியவர்.

சிவப்பிரகாசம்—சித்தாந்த சாத்திரம் பதினான்கனுளொன்று. நூற்றொரு திருவிருத்தங்களையுடையது. கொற்றவன்குடி உமாபதி சிவாசாரிய

ரளுளியது.

சிவமலை—கொங்குநாட்டிலுள்ள ஒரு மலை இது சுப்பிரமணியஸ்தலங்களி லொன்று.

சிவமூர்த்தங்கள்—(1) அஷ்டாஷ்ட மூர்த்தத்திற்காண்க. (2) பஞ்சவிம் சதிமூர்த்தத்திற் காண்க

சிவயோகநாயகி — திருக்காறூரிலே கோயில்கொண்டிருக்கும் உமாதே வியார் திருநாமம்.

சிவராத்திரி — மாசிமாச அபரபக்ஷ சதுர்த்தசியோடுகூடிய அர்த்தராத் திரிகாலமாகிய புண்ணிய முகூர்த் தம். அதுவே லிங்கோதபவகாலம். இது பிரமவிஷ்ணுக்கள் ஜோதி லிங்கத்தின் அடிமுடி தேடியதால் உளதாயது. இத்தினம் சிவவிரதங் களில் முக்கியமானதொன்று. அன் றுமுழுவதும் உபவாசமிருந்து இர வுமுழுவதும் துயிலாது யாமநான் கினுஞ் சிவார்ச்சனை செய்தற்குரி யது. சிவபூஜையில்லார் பஞ்சாக் ஷரஜபம் சிவபுராணபடன சிரவ ணமுதலியனசெய்து சிவதரிசனஞ் செய்யவேண்டும். [ண்க.

சிவலிங்கம்— இலிங்கமூர்த்தியிற் கா

சிவலோகநாதர்— திருப்புன்கூரிலே சிவபிரானுக்குவழங்குந்திருநாமம்.

சிவவாக்கியர்— சிவவெனுஞ் சத்தத் துடனே தோன்றி ஞானநிஷ்டா பரராயிருந்து சிவவாக்கியமெனத் தம்பெயரால் நூல்செய்தவர்.

சிவனன்—சியவனனிற் காண்க.

சிவன்—(1) சிவபிரானிற்காண்க. (2) அக்ரூரனுக்கிளவல்.

சிவாகமங்கள்—ஆகமங்களிற்காண்க.

சிவாக்கிரயோகிகள்— சித்தாந்த தீபி கை. சிவஞானபோத பாஷியம்-தத் துவ தரிசனம் - பாஞ்சராத்திர சபேடிகை முதலிய சிறந்த சைவ நூல்களியற்றியவர். இவர்தஞ்சை யிலிருந்தசரபோஜி மகாராஜாவின் முன்னர் மணவாளமா முனியெ னும் வைணவரோ டெதிர்த்துப் பதினேழுநாள் வரையில் அவர் கேட்ட கேள்விக்கெல்லாம்விடை தந்து சிவ பரத்துவ நாட்டினராக் கண்ட வைணவர்சிலர் யோகிகள் எழுந்தருளியிருந்தமடத்தைத் தீக் கொளுவ அம்மட முழுவதும்வெந் தொழிதலைக்கேட்டசரபோஜி மகாராஜா ஓடோடிக்கண்ட விடத் து யோகிகள் நிஷ்டையிலிருக்க ஆனந்த பரவசமாகி உபசரித்து அழைத்துப்பணிந்து இச்சையின் படிசெல்லவிடுத்த,துந்நிலைமபுரிந் தவர்களைத் தீயில் வீழ்த்தினன்.

சிவாலயமுனிவர்— நடராசப்பெரு மான திருவருளால் அகத்தியமுனி வரையடுத்து, தேவார அடங்கன் முறையினின்றும் அவரால் திரட் டிக் கொடுக்கப்பெற்ற அகத்திய தேவாரத்திரட்டினையடைந்து அவ் விருபத்தைந்து திருப்பதிகங்களை யும் நாடோறும் சிரத்தையுடன் கிரமமாகப் பலகாலம்பாராயணஞ் செய்துகொண்டு திருவருட்பேற் றை யடைந்தவர்.

சிவானந்தலகரி — சங்கராசாரியர் தேவிஸ்துதியாக அருளிச்செய்த ஒருநூல்.

சிவானந்தவல்லி — திருக்கோவலூர் வீரட்டானத்தில் உமாதேவியார் திருநாமம்.

சிவானி—பார்வதி. சிவசக்தி.

சிவேதன் — ககைவிஜயற்குக்ஙளய

னான ஓரரசன். [சிலப்]

சிவை—(1) பார்வதி. (2) அங்கிரசன் மனைவி.

சிஷ்டி — துருவன் மகன். பவியன் சகோதரன். இவன்மனைவி சுகச்சாயை.

சிஷ்யபாவமூர்த்தி—சிவமூர்த்தங்கள் அறுபத்து நான்கனு ளொன்று. முருகக்கடவுள் கந்தகிரியி லிருக்கையில் அவ்வழியே சென்ற பிரமன் சாஷ்டாங்கமாகப் பணியாது கைகூப்ப, நீயாவன் யாதுசெய்வோனென, யான் வேதன். சிருஷ்டி செய்வேனென, வேதமோதுகவென்று அவனோதுகையில் பிரணவத்தின்பொருளை வினவி அதனையுணராமையின் சிறையிலிட, சிவபெருமான் அவனைச் சிறைவிடுமாறுகேட்டுவிடுவித்து அப்பிரணவப் பொருளைக் கூறுகவெனக்கேட்டு உபதேசிக்கப்பெற்றமூர்த்தி.

சிறப்புலிநாயனார்—அறுபான்மும்மை நாயன்மாருளொருவர். திரு ஆக்கூரில வேதியர்குலத்தி லுதித்துச் சிவபக்திசெய்து சிவனடியாரைச் சாஷ்டாங்கமாகப்பணிந்து உபசார வார்த்தை கூறித்திருவமுது செய்வித்து, தானம் யாகம் பஞ்சாக்ஷர ஜபம் முதலியனசெய்து அவற்றின் பலனைச் சிவப்பிரீதி செய்துமுத்தியடைந்தவர்.

சிறியகோவிந்தபெருமாள்—வைணவ சிங்காசனாதிபதிகள்எழுபத்துநால்வருளொருவர்.

சிறியரத்தினக்கவிராயர்— புலவராற்றுப்படைபாடியபுலவர்.

சிறியாண்டான்— வைணவ சிங்காசனாதிபதிகளிலொருவர்.

சிறுகுடிகிழான்பண்ணன்—சோழன் குளமுற்றத்துத்துஞ்சியகிள்ளிவளவன் நண்பரி லொருவன். சிறந்த கொடையாளி. பண்ணனென்றுஞ் சொல்லப்படுவன். இவனைப்பாடினார் கோவூர்கிழார் - சோழன்குளமுற்றத்துத் துஞ்சியகிள்ளி வளவன் - மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார். [புறநா]

சிறுத்தொண்டநாயனார்--இவருக்குப் பரஞ்சோதியாரென்பது பண்டைய திருநாமம். அறுபான்மும்மை நாயன்மாருளொருவர். திருச்செங்காட்டங்குடியிலேயவதரித்த ஆமாத்திர வேதியர். சோழராஜனுக்கு மந்திரியாயிருந்தவர். சிவபக்திமிக்குச்சிவனடியவர்களையுண்பிப்பதே விரதமாகக் கொண்டவர். அரசன் கட்டளையால் வடபுலஞ் சென்று பகைமன்னரைவென்று மிக்க நிதி முதலியன கொணர்ந்து அரசனை மகிழ்வித்தனர். அரசன் இவரது சிவபக்தியை யுணர்ந்து பெருநிதியளித்து உமதுவிருப்பின்படி சிவபக்தி சிவனடியார் பக்தி செய்துகொண்டிருப்பவெனவிடுப்ப, திருவெண்காட்டு நங்கையாரை மணந்து இல்லற மேற்கொண்டு சீராளனெனும் புதல்வனையீன்று அடியர்க்கமுதூட்டுத் தொண்டிற்றலைநின்றவர். இவர்பக்தியைஉலகினர்க்கறிவிப்ப, சிவபிரானே பயிரவவேடந்தாங்கிவர, நாயனார் இவ்வென் வீட்டிலமுது செய்தருள்கவென, எம்மையூட்டுவதருமை யாம். ஆறு மாதத்திற் கொருவிசை நரப்பசுவீழ்த்தியுண்பது. அதுவுந் தாய்பிடிக்கவும் தந்தை யறுக்கவும் அக்

காலத்தில் ஆறுவயதுள்ள அத்தனயன் சிரிக்கவுமமைந்தா யிருக்க வேண்டுமென, அதற்கிணங்கித்தமது புதல்வனைப்பள்ளியினின்றுவருவித்துநீராட்டி அங்ஙனமே முடித்துக் கறிசமைத்துப் பயிரவர்க்கு அன்னமிடுகையில்,மைந்தனைத்தருவிக்க என, அவனிப்போதுதவானென, பெரியர் அவன்வந்தபின்னரே யாமுண்பமென, நாயனாரும், அவர் மனைவியாரும் புறம்போந்து விளிப்ப, சீராளதேவன்பள்ளியினின்று வருவான்போல் வரப்பெற்றவர்.இந்நாயனாரும்இவர்மனைவியார் திருவெண்காட்டு நங்கையாரும், அவர் தோழியாராயிருந்த நரமாமிசத்தைச்சமைத்த சந்தன நங்கையாரும் முத்திபெற்றனர்.

சிறுபஞ்சமூலம் — சங்க மரீஇய பதினெண்கீழ்க் கணக்கினுளொன்று. இதுவெண்பாக்களாலாயது. ஆக்கினோர் காரியாசான். பஞ்சமூலமைந்து வேர்கள். மருத்துவநூலார் கண்டங்கத்திரிவேர் சிறுவழுதுணைவேர் சிறுமல்லி வேர் பெருமல்லிவேர் நெருஞ்சிவேர்ஆகிய இவ்வைந்தும் உடலுக்குறுதி தருமென்பர். அங்ஙனமே உயிர்க்குறுதிதரும் அவ்வைந்து நீதிகளை ஒவ்வொருபாடலிலும் உடைத்தாயிருத்தலின்இப்பெயர்பெற்றது.

சிறுபாணாற்றுப்படை— எட்டுத்தொகையுளொன்றானபத்துப்பாட்டில் 3-வது. பரிசில் பெறக்கருதியபாணனொருவனைப் பரிசில் பெற்றானொருவன் ஏறுமாநாட்டு நல்லியக்கோடனிடத்தே ஆற்றுப் படுத்தியதாக அந்நல்லியக்கோடனை இடைக்கழிநாட்டு நல்லூர்நத்தத்தனார்பாடியது. இது 269 அடிகளை யுடையது. இதற்கு நச்சினார்க்கினிய ருரையுளது.

சிறுபாண்டரங்கனார்—ஒருசெந்தமிழ்ப்புலவர். இவர்நூல் சிலப்பதிகாரவுரையில் எடுத்தாளப்பட்டது.

சிறுபுலியூர் — ஒரு விஷ்ணுஸ்தலம். காவிரியின் தென்கரையிலுள்ளது.

சிறுப்பள்ளிதேவராஜபட்டர் — வைணவசிங்காசனாதிபதிகள்எழுபத்துநால்வரிலொருவர்.

சிறுமலை—பாண்டிநாட்டிலுள்ளதொருமலை. இங்கிருந்தே மலைவாழைகள் வருகின்றன. அவை மிகச்சுவையுள்ளன.

சிறுமேதாவியார்—கடைச்சங்கப் புலவருளொருவர். இவர் கவியொன்று திருவள்ளுவமாலையிலுள்ளது.

சிறுவெண்டேரையார்— கடைச்சங்கப் புலவரிலொருவர். இவராற் பாடப்பட்ட செய்யுட்கள் எட்டுத்தொகையுட்சில்வுள.

சிற்சுகாசாரியர்—சங்கரபாஷியத்திற்குரை யியற்றினருளொருவர்.

சிற்றம்பலம்— திருச்சிற்றம்பலமென்றும் வழங்கும். சிதம்பரம்.

சினி— (1) யுதாசித்துபுத்திரன். (2) அநமித்திரன். (3) விரோதன் புத்திரன். இவர்கள் மூவரும் யதுமரபினர். (4) புதன் மரபிற் கர்க்கன் புத்திரன்.

## ஸ்ரீ

சீகாளத்தி-தொண்டைநாட்டிலுள்ள சிவஸ்தலங்களி லொன்று. சீ-சிலந்தி, காளம்-பாம்பு, அத்தி-யானை, இம்மூன்றும் பூசித்துப் பேறுபெற்றவிடமாகலின்சீகாளத்தியெனப்

பெயராயது. கண்ணப்பநாயனாரும் நக்கீரனாரும் முத்தி யடைந்ததும் வாயுலிங்க க்ஷேத்திரமுமாம். இது திருவேங்கடத்தின் கிழக்கிலுள்ளது.

**சீதத்தன்**—இராசமாபுரத்துள்ள ஒரு வணிகன். இவன் வெள்ளி மலையிலிருந்து காந்தருவ தத்தையை யழைத்துவந்தவன். சீவகன் றோழரிலொருவன். கோவிந்த மகாராசன் பிதா. கோவிந்தமகாராசன் புதல்வன். [சீவக]

**சீதரன்**—சித்திபுரத்தரசன். நீலபதி யென்பாள் பிதா. [மணி]

**சீதளர்**—ஜைனமதஸ்தாபகரானஇருபத்துநான்கு தீர்த்தகரரிலே பத்தாவதாகத் தோன்றியவர்.

**சீதா / சீதை** } மிதிலைக் கரசனான ஜநகன் யாகத்திற்காகப் பூமியையுழுகையில் [சீதா = உழு படைச் சாலில்] பிறந்தவள். இராமன் மனைவி. பஞ்சகன்னியரிலொருத்தி. இவள் பூர்வ சரிதையை வேத வதியிற் காண்க.

**சீத்தலைச்சாத்தனார்**—சாத்தனாரென்றும், மதுரைக்கூலவாணிகன் சாத்தனாரென்றும் பெயருடையார். சாத்தனாரிற்காண்க.

**சீமந்தனி**—சித்திரவருமன் புத்திரி. நளராசன் பௌத்திரனும், இந்திரசேனன் மகனுமாகிய சந்திராங்கதன பாரி. யாஜ்ஞவல்கியர் மனைவி மயித்திரேயின் உபதேசப்படி சோமவாரவிரதானுஷ்டானஞ் செய்தவள். அவ்விரதபலத்தால் யமுனையாற்றில் ஓடங்கவிழ்ந்து வீழ்ந்த கணவன் நாகலோகமுற்று, தக்ஷகனால் சீராட்டப்பட்டு மூன்று வருடங்கழித்து மீண்டும் தன்னையடையப் பெற்றவள்.

**சீயகங்கன்**—நன்னூல்செய்வித்த ஒரு சிற்றரசன்.

**சீரத்துவஜன்**—ஜனகன்.

**சீராமப்பிள்ளைபட்டர்**—வைணவசிங்காசனாதிபதிகள் எழுபத்து நால்வருளொருவர்.

**சீராளன்**—சிறுத்தொண்ட நாயனார் குமாரன். சிவபெருமான் பயிரவவேடமாக வெழுந்தருளி நரமாமிசம் விரும்பிய பொழுது இச்சீராளனைத் தாம் சமைத்துப் படைத்தது. பின்னர் உயிர் பிழைத்தவன். சிறுத்தொண்டநாயனாரிற் காண்க.

**சீர்த்தி**—மாவலிமரபமரையி லுதித்த ஓரரசன் புத்திரி. நெடுமுடிக்கிள்ளியின் மனைவி. உதயகுமரன் தாய். இராசமாதேவியென்றுங் கூறப்படுவள். [மணி]

**சீவகசிந்தாமணி**—ஐம்பெருங் காப்பியங்களிற் றலைமையாயுள்ளது. திருத்தக்கதேவரென்னும் ஜைனமுனிவரியற்றியது. இது சீவகன்சரிதையை விளக்கக் கூறும். சிந்தாமணியென்றும் வழங்கும். 3145 செய்யுள்களையுடையது. இதில் 2700 கவிகள் இவராலும் எஞ்சியவை கந்தியாராலும் செய்யப் பட்டன. இதற்கு நச்சினார்க்கினியர் உரை செய்துளர்.

**சீவகன்**—சீவக சிந்தாமணி யெனுங் காப்பியத்தலைவன். ஏமாங்கத நாட்டிராசமாபுரத் தரசுசெலுத்திய சச்சந்தன்மகன். இவன் தாய்வயிற்றிலிருக்கையில், கட்டியங்கார னென்னுமந்திரி அரசினைக் கைக்கொண்டு சச்சந்தனைக்கொல்ல, இவன் தாய் மயிற்பொறியூர்ந்து சென்று

ஒருமபானத்தருகே யிவனைக் கருவுயிர்த்தனள். இவனுக்குச் சச்சந்தன், சுதஞ்சணன், தரணி, கந்துக்கடன், விசயன், தததன், பாதன், கோவிந்தன் எனும் புதல்வர்முறையே காந்தருவதத்தை, குணமாலை, பதுமை, கேமசரி, கனகமாலை, விமலை, சுரமஞ்சரி, இலக்கணையெனுமனைவியர்யாற் றோன்றினர்.

சீவரவாடை — மருதந்துவர் நீரில் தோய்த்த பௌத்தபிக்ஷுக்களின் வஸ்திரம். [மணி]

## சு

சுச்சாயை—சிஷ்டி மனைவி.

சுகண்டன்—அச்சுவக்கிரீவன் தம்பி.

சுகதன்—புத்தன். [சூளா]

சுகந்தநாயகி—திருவேட்டக் குடியில் உமாதேவியாருக்கு வழங்குந் திருநாமம்.

சுகந்தவனநாயகி—திருச்செம்பொன் பள்ளியில் உமாதேவியார் திருநாமம்.

சுகர்மன—ஒரிருடி. ஜைமினிமுனி புத்திரனாகிய சுமந்தன் மகன்.

சுகர்மா—பாண்டவரி லொருவனான சகதேவன் புத்திரரி லொருவன்.

சுகவாஞ்சிநாயகர் — திருவாஞ்சியத்தில் சிவபிரானுக்கு வழங்குந் திருநாமம்.

சுகன்—(1) வியாச புத்திரர் அவர் வனத்தில் அரணிமிதித்தபொழுது அக்கினியுடன் சுக முனிவரைப் பெற்றனர் [சைவபு] இப்பிறப்பு வேறுவகையாக; வியாசருக்குங் கிளிவடிவாயிருந்த கிருதாசிக்கும் பிறந்தமையின், சுகரெனப் பட்டனர். அரம்பையென்னும் அப்சரசு தன்னைப்புணரும்படி பலாத்காரஞ் செய்தும் மனஞ் சலியாதவர். (2) இராக்கதன். இராவணன் சாரணரி லொருவன்.

சுகன்னியை—வைவசுவத மநுவின் மகனாகிய சரியாதியின் புத்திரி. சியவனன் பாரியை. இவள் தன் பிதாவுடன் தபோவனத்தி லிருக்கையில் மகாருத்திர பக்தனாயிருந்த இவள் பிதா, புற்றிலதவஞ் செய்துகொண்டிருந்த சியவனனைக் கண்டு அவனிடத் தொப்புவித்தது அசுவினி தேவரால் அகநோயை நீக்கினன். சியவனனுக குற்றதொருநோயையும் அசுவினி தேவரே நீககினர். அசுவினிதேவரிற்காண்க.

சுகிருதி—பிருது புத்திரன்.

சுகுணசேகரபாண்டியன் — சுகுணபாண்டியனுககுப்பின் மதுரையை யாண்டவன்.

சுகுணபாண்டியன்—(1) இராஜாதிராஜபாண்டியனுக்குப் பின் மதுரையையாண்ட இருபத்தொன்றாம் பாண்டியன். பன்றிக் குட்டிக்குப் பால் கொடுத்த திருவிளையாடல் கண்டவன். (2) இருபத்து மூன்றாம்பாண்டியன். இவன் காலத்தில் கரிக்குருவிக் குபதேசஞ்செய்தது நாரைக்கு முத்தி கொடுத்ததாகிய திருவிளையாடல்கள் நிகழ்ந்தன.

சுகுணன்—பாண்டுபுத்திரனான வீமசேனனுக்கு ஜலந்தரை யென்பாளிடம் பிறந்தவன்.

சுகுமாரவனம் — வடவரை யருகேயுள்ள ஒருவனம். ஆங்குற்ற ஆடவர் பெண்வடி வெய்துவர். இதற்குக் காரணம் உமாதேவி யோடு சிவபெருமான் விநோதமாக விளை

யாடிக்கொண் டிருந்த விடமாம். இளனெனும் அரசன் பெண் வடிவேற்றுப் புதனைக்கூடிப் புத்திரனைப் பெற்று மீண்டும் திருவருளால் ஆண் வடிவேற்றதும் இங்கடைந்தமையாலேயேயென உத்தரராமாயணங் கூறும்.

சுகுமாரன்—சவிபு புத்திரன். திருஷ்டகேதன் தந்தை.

சுகேசன்— வித்யுற் கேசன் மகன். இவன்மனைவி தேவவதி. புத்திரர் மாலியவந்தன் முதலியோர்.

சுகேசினி—சகரன் ஜேஷ்ட பாரி. அசமஞ்சசனைப்பெற்றவள்.

சுகேதனன் — ஒரியக்கன். தாடகை தந்தை. தன்னரசுரிமையை யிழந்து அங்கிரசமுனிவர் போதித்தபடி நவராததிரி விரதாநுஷ்டானஞ்செய்துமீண்டும்அவறறைப்பெற்றவன் இவனே முதலில் நவராததிரிவிரத மநுஷ்டித்தவன்.

சுகேதன்—(1) மிதிலன் பிரபௌத்திரன். (2) க்ஷேமன் மகன.

சுகோத்திரன்—பாண்டவரி லொருவனான சகதேவனுக்கு விசயையிடம்பிறந்தவன்.

சுகோஷம்—நகுலன் வெற்றிச்சங்கம்

சுக்கிரவாரம்--இஃதொருவிரததினம். தனித்தனி விநாயகர் சுப்பிரமணியர் உமாதேவியாரெனுமிவர்களில் ஒருவரைப் பற்றி அநுஷ்டிப்பது. இவற்றுள் விநாயகவிரதம் வைகாசிமாசசுக்லபக்ஷ முதற் சுக்கிரவாரமும், சுப்பிரமணியவிரதம் ஐப்பசிமாச முதற் சுக்கிரவாரமும், உமாதேவிவிரதம் சித்திரைமாச சுக்லபக்ஷ முதற் சுக்கிரவாரமும் தொடங்கப்படவேண்டும்.

சுக்கிரன் } பிரமமானச புத்திரரி
சுக்கிராசாரி } லொருவராகிய பிருகுவின் பௌத்திரர். அசுரகுரு. நவக்கிரகங்களி லொரு கிரகநிலை பெற்றவர். மழைக்கதிபதி. இவருடைய தாய் தேவ லோகத்தில் இந்திரனில்லாதிருக்கும்படி தவம்புரிந்துகொணடிருக்கையில்விஷ்ணுவாற் கொல்லப்பட்டவள். மகாபலிச்சக்கரவர்த்திபால் விஷ்ணு வாமனவுருக்கொடு சென்று மூவடி மண் யாசித்தபொழுது தடுத்தும் அவன் கேளாது எள்ளிட்டு நீர்சொரிகையில், அக்கெண்டியின்மூக்கில் எளளுருவாக நின்று நீரைத் தடுத்து விஷ்ணுவால் ஒருகண் போக்கப்பெறறவர். இறந்தோரை யெழுப்பும் அமுதசஞ்சீவினி வித்தையையுடையவர் இம்மந்திர பலத்தால் அந்தகாசுர யுத்தத்தில் அசுரச் சேனையை யெழுப்பிக்கொண் டிருந்தது கண்ட சிவபெருமான் இவரை யெடுததுவிழுங்கிவிட, பின்னொருகாலத்தில் சுக்கிலரூபமாக வெளிவந்தவர். இவரிருப்பிடம் அப்புமண்டலமென்பர்.

இவர் மகள் தேவயானை, தன் தந்தைபால் அமிதசஞ்சீவினி [இறந்தோரை யெழுப்பும்] வித்தையைக் கற்கவந்து கற்றுச் சென்ற கசன்மேற் காமுற்று மணம் புரிகவென அவன் தடுப்ப அவனைச்சபித்து, அவனால் வேதியனுக்கு மனைவியாகாது யயாதிக்கு மனைவியாயினள். கசனிற்காண்க. இவளைப்பற்றிய பிறவிடயங்கள் விருஷபர்வனிற்காண்க.

சுக்கிரீகன்—பார்ஹத்திரத வமிசத்

துதித்த ரிபுஞ்சயன்மந்திரி.

சுக்கிரீவன்—வானரவீரன் - கிஷ்கிந்தைமன்னன் வாலிக்கிளையவன். இருக்ஷவிரஜன் புத்திரன். இவன்மனைவி உருமை. தன் தமயனான வாலி தன் அரசுரிமையையும் மனைவியையும் கைப்பற்றிக்கொண்டு துரத்திவிட, பம்பை நதிக்கரையிலிருந்து தனக்குச் செய்த துன்பங்களையெல்லாம் இராமனிடம் முறையிட்டு, அத்துயரை நீக்கித்தந்தால் அதற்குப் பிரதியுபகாரமாகச் சீதையை மீட்டுவருதற்கேதுவாகிய உதவிகளைச் செய்வலென்று கூறி, இராமனைப் பல பரிக்ஷைசெய்ய விரும்பி, சர்ப்ப கோணமாக நின்ற ஏழுமராமரங்களை ஓரம்பால் துளைபடுத்தும்படி கேட்டு அங்ஙனமே செய்யக்கண்டு திடங்கொண்டு, வாலியை யறைகூவி அவனுடன் போர்செய்துகொண்டிருக்கையில், இராமனால் மறைந்துநின்று அம்புவீழ்த்தி வாலியைக்கொன்று பகை நீக்கப்பெற்றவன். பின்னர் இராம ராவணயுத்தத்தில் எழுபது வெள்ளம் வானர சேனைகளோடு துணையாகச்சென்று இராவணவத முடித்துச் சீதையின் சிறையைநீக்குவித்தவன். இவன் கட்டளை மறுக்கப்படாமையின் சுக்கிரீவாக்கினையெனவும் உலக வழக்கினுள்ளது காண்க.

சுத்திமதி—ஒரு புண்ணியநதி. இது கடகபுரிக்கருகிலுள்ளது.

சுசர்மா—(1) திரிகர்த்தமெனுந் தேசத்தரசன். இவன்பிதா சுதன்வன். (2) ஓரந்தணன். தன் மனைவியைப் பலாகனென்னு மிராக்கதன் கவர்ந்து செல்லுகையில், உத்தான பாதன் மகனாகிய உத்தமனால் மீட்டுக்கொடுக்கப் பெற்றவன். (3) கர்ணன் மகன். நகுலனால் கொல்லப்பட்டவன். (4) மகததேசத் தரசரிலொருவன். ஆந்தர விருத்தியனெனுஞ் சூத்திரனாற் கொல்லப் பட்டவன்.

சுசாந்தி—அஜமீடன் இரண்டாம்புதல்வனான நீலன் பௌத்திரன்.

சுசி—(1) அக்கினி (2) அக்கினியின் மகன் (3) மிதிலாபுரி மன்னரிலொருவன் (4) யதுமரபினனான அந்தகன்மகன்.

சுசுருதன்—(1) மிதிலாபுரி மன்னரிலொருவன். இவன் மகன் ஜயன் (2) காசிராஜ குமாரரிலொருவன். தன்பெயராற் சுசுருதமெனும் வடமொழி வைத்தியநூல் செய்தவன். நூற்றிருபத்து நான்கு யந்திரசஸ்திரங்கள் அதிற் கூறப் பட்டுள. [பூர்வகாலத்தில் சல்லிய மெனப்படுசஸ்திரவித்தையைப் பயிற்சி மிக்கிருந்ததாகத் தெரிகின்றது.]

சுசேடணன்— சுக்கிரீவன் சேனைவீரரிலொருவானரன்.

சுசோபை—மண்டூக ராஜன் மகள். சூரியவம்சத்துப்பரீக்ஷித்துமனைவி. இவள் புத்திரர் சலன் தலனென்போர்.

சுச்சுதன் — சடியரசன் மந்திரிகளிலொருவன். [சூளா]

சுஜன்மகிருது—சோமகன் புத்திரன்.

சுஜாதர்—புத்தர்களில் பதினைந்தாவதாகத்தோன்றியர்.

சுஜாதை—அஷ்டவக்கிரன்தாய்.

சுடர்க்கொழுந்தீசர்—திருத்தூங்கானைமாடத்திற் சிவபிரானுக்கு வழங்குந் திருநாமம்.

சுதக்ஷிணன்—பௌண்டரக வாசுதேவன மகன். தன் தந்தையைக் கண்ணன் கொன்றமையின் பழிக்குப் பழிவாங்கக்கருதி, ஒரு பூதத்தைக் கண்ணன் மேலேவி அப் பூதத்தாலேயே உயிர்நீத்தவன்.

சுதக்ஷிணை—திலீபன் மனைவி. இவள் தன் கணவனோடு தேனுவைப் பண்ணுள் வழிபட்டு ரகுவைப் பெற்றவள்.

சுதசாகரன்—சடியரசன் மந்திரிகளிலொருவன் [சூளா]

சுதஞ்சனன்—(1) சீவகன் புதல்வரிலொருவன். (2) சீவக னுபதேசத்தால் நாய்ப்பிறப்பொழிந்து இயக்க வடிவுற்றோன். குணமாலை புதல்வன்.

சுதஞ்சனை—கச்சன் மனைவி [சூளா]

சுதந்தி — வட மேற்றிசைக் காவல் பூண்ட திக்கயத்தின்பிடி.

சுதபன் — ஹேமன் மகன். இவன் மகன் பலி.

சுதமதி— கௌசிக னெனும் அந்தணன்மகள். மாருதவேக னெனும் வித்தியாதரனால் முன்னொருகால் கவர்ந்து கொண்டு போகப்பட்டு, பின்னர்க் காவிரிப்பூம் பட்டினத்திலிடப்பட்டு மாதவியின் உயிர்த்தோழியாயிருந்தவள். சங்க தருமனிடத்தே தருமங்கேட்டவள். மணிமேகலைபால் மிக்க அன்புடையவள்.

சுதர்சனம்—திருமால் சக்கரம். இது சிவப்பிரசாதமானது. சலந்தராசுரனைச் சங்கரிக்கும்படி சிவபெருமானால் நிர்மிக்கப் பட்டது [சலந்தரனிற்காண்க.] இது சிவபிரானிடத் திருந்தமையின் இதனைப் பெறக் கருதிய திருமால் நாளொன்றுக்கு ஆயிரஞ் செந்தாமரை மலர்களாற் சிவார்ச்சனை செய்து வருகையில், சிவபிரான் அவர் பக்தியைப்பலர்க்கும் தெரிவிக்கும்படி ஒரு கமல மலரை மறைக்க, மந்திர மொன்றுக்கு மலர்குறைவது கண்டு தமது விழியொன்றைப் பறித்து மலராகப் பாவித்து அர்ச்சனை செய்து முடிக்க, சிவபிரான் களித்து, அக்கண்ணைப் பெறுமாறருளி, கண்ணனெனுநாமமும், சுதரிசனப்படையும் பிரசாதித்தருளினர்.

சுதர்சனன—(1) திருமால். (2) ஒரு வித்தியாதரன. இவன் அங்கிரசனை உல்லங்கனமாகச் சிரித்த கர்வத்திறகாகச் சர்ப்பமாகச் சபிக்கப்பட்டு அவ்வுருவேற்றுக் கிடந்து கண்ணன் திருவடிப் பரிசத்தால் அச்சாபநீங்கியவன் (3) சுதர்சனை மகன். தருமதேவதை தன கிருகத்திற்கு அதிதியாகவந்து புசிக்கப் பேறுபெற்ற அரசன். [சைவபு]

சுதர்சனை—மநுவமிசத்துதித்த துரியோதனனுக்கு நருமதையிடம்பிறந்தபுத்திரி. இவள் அக்கினி தேவனைக் கூடிச் சுதரிசனனைப் பெற்றனள்.

சுதலம்—கீழேழுலகங்களிலொன்று.

சுதனுசு—குருபுத்திரரிலொருவன்.

சுதன்மன — (1) தேவகிரி அக்கிரகாரத்தி லிருந்த ஓரந்தணன். இவன் மனைவியர் சுதேகை - குஸ்மை. மகன் சுப்பிரியன் [சைவபு] குஸ்மை காண்க. (2) பக்ஷீசுவர முனிவன், தனக்குப்பெண்வேண்டுமென, தன்குமாரத்திகளில்யாவள் விரும்புவளோ அவளை மணக்கவென்று அவர் திவ்விய ரூபத்துடன்

அந்தப்புரஞ்செல்ல அக்கன்னிகை கள் பதினைவரும் விரும்ப, அவர் களையெல்லாம் அவருக்கே மணஞ் செய்து கொடுத்த ஓரரசன்.

சுதன்மர்—பதினொரு கணதரரிலொ ருவர். சீவகன் சரிதையைச் சேணி கமகாராசனுக்கு முதலிற் சொன் னவர்.

சுதன்மை-இந்திரன்வசந்தமண்டபம்.

சுதன்வன்—(1 லோகபாலகர் நால் வரிலொருவன். (2 திரிகர்த்த தேச த்தரசன். சுசர்மன தந்தை.

சுதன்வானன—யதுமரபினன் - வசு தேவனுக்கு ஸ்ரீதேவியிடத்திற்பிற ந்தபுதல்வரிலொருவன்.

சுதாசன—மூன்றாஞ்சிஞ்சயனன் புத்தி ரன். சஹாதேவன தந்தை.

சுதாமனி — வசுதேவன தம்பியான அநீகன மனைவி.

சுதாரை — அருகஸ்தோத்திரியின புத ல்வி. [சூளா]

சுதீக்ஷணன்—ஒரிருடி - இராமர் அக ஸ்திய ராச்சிரமத்தை யடைகை யில் உபசரித்து விருந்திட்டமுனி வன். இம்முனிவனைத தின்னவந்த கர்க்கடனென்னு மரக்கனும், அவன் மனைவி புஷ்கவியும சாம்பராக்க ப்பட்டனர்.

சுதேதை—தேவகிரியிலிருந்த சுதன் மன்மூத்தமனைவி. இவளைப்பற்றிய வற்றைச்சுஸ்மையிற் காண்க.

சுதேவன—(1) யதுமரபினன். தேவ கன்புத்திரன். (2) சம்பன் புத்தி ரன் விஜயனபிதா. (3) விதர்ப்ப நாட்டரசன். இவன்மகன்சுவேதன்.

சுதேஷ்ணை—(1) அநு மரபினனான பலிமனைவி (2) விராடன் மனைவி. கேகய ராசன புத்திரி. கீசகன் சகோதரி, பாண்டவர் அஞ்ஞாத வாசத்தில் திரௌபதி இவளுக் குத் தான் தோழியா யிருந்தனள். அப்பொழுததான் கீசகன் திரௌ பதியைக் காமுற்றுப் பலாத்கார மாகப் புணரத்தொடங்கி வீமசே னனாற் கொல்லப்பட்டனன்.

சுதை—கசியபர் மனைவியரி லொரு த்தி. ஒரு தலை நாகங்களைப் பெற் றவள்.

சுத்தசைவம—ஆன்மா சிவத்துடன் கூடியபொழுது ஆன்மா சிவாநு பவத்திற்சார்ந்ததாகா தென்பவன.

சுத்தன—ஆயுபௌத்திரன். அநேநச ன மகன்.

சுத்தோதனன—கௌதமர்பிதா. இவ னைச் சாக்கிய சக்கிரவர்த்தி யென் றுங்கூறுவர். [மணி]

சுத்யும்னன—வைவசுவத மநுசெய்த யாகத்தில பெண் மகவாகத் தோ ன்றி, வசிஷ்டர் முயற்சியால் ஆண் வடிவானவன. இவன பின்பொரு காலத்தில் இளையெனும் பெயரொ டிப் புதனைக் கூடிப புரூரவனைப பெற்ற மீண்டும ஆண்வடிவேற்று இளனெனனும் பெயருடன் உத்க லன கயன விமலன் எனும புத் திரர் மூவரைப் பெற்றனன.

சுதயுவு—சாருபுத்திரன். இவன் பூரு வம்சத்தினன்.

சுநகன்—(1) கிருத்சமதன் புத்தி ரன். தவசிரேஷ்டரான சௌநகர் பிதா (2) ஒரிருடி. ருரன் பிரமத்து வரையிடம பெற்ற குமாரன்.

சுநசேபன—ரிசிகமுனிவனுக் கிர ண்டாம்புத்திரன். இவனை தேவராத னென்றும் பெயருடையான். அரி ச்சந்திரன தன் யாகப்பசுவை விழ

ந்தாலேவகியர் கூறியபடி அசற்குப் பதிலாக நரபசுவைத் தேடிச் சென்று பெரும்பொருள் கொடுப்பதாகச்சொல்ல அதற்கிசைந்த இருசிகமுனிவராற் கொடுக்கப் பெற்று, விசுவாமித்திரர் சூழ்ச்சியால் யாகத்தில்தேவர்களே உயிர்காத்துவிடப்ப, விசுவாமித்திரருடனிருந்து தவஞ்செய்து முத்தியடைந்தவன். [இவனை அஜிகர்த்தன் மகனென்பதுமுண்டு]

சுநசை—ஒருநதி. பாரியாத்திர பர்வதத்திலுற்பத்தியாவது.

சுநந்தன்—திருமாலின் பரிசனர்களிலொருவன்

சுநந்தை—(1) துஷ்யந்தன் புத்திரனாகிய பரதன்மனைவி (2) இந்துமதியின் தோழிகளிலொருத்தி (3) சிவகனை வளர்த்ததாய்.

சுநாபன்—வச்சிரநாபன் தம்பி.

சுநாமன்—கம்சனுக்கிளவல்.

சுநீதன்—(1) சந்ததிமகன். அலர்க்கன் பௌத்திரன். க்ஷேமன் தந்தை. (2) சிசுபாலன் சேனாபதி.

சுநீதி—உத்தானபாதன் மனைவி.

சுநீதை—மிருத்யு ஜேஷ்டகுமாரி. அங்கன்மனைவி. இவள்மகன் வேனன்.

சுந்தரகுசாம்பிகை—திருவீழிமிழலையில் உமாதேவியாருக்கு வழங்கும் திருநாமம்.

சுந்தரத்தோளுடையார்—வைணவ சிங்காசனாதிபதிகள் எழுபத்துநால்வரிலொருவர்.

சுந்தரநாயகியம்மை—திருமீயச்சூரில் உமாதேவியார் திருநாமம்.

சுந்தரமூர்த்திசுவாமிகள்—ஸ்ரீ கயிலாயத்தில் பரமசிவத்துக்குப் பூமாலை தொடுத்தல் முதலிய தொண்டுகளைச்செய்து கொண்டிருந்த ஆலாலசுந்தரர் ஒருநாள் புட்பமெடுக்க நந்தவனத்திற் போனபோது, அவ்விடத்திற் புட்பங்கொய்துகொண்டிருந்த அநிந்திதை கமலினியென்னும் உமையம்மைத் தோழிகளிடத்தில் மனஞ் சென்றதையும் அம்மாதர்களும இவரிடத்தில இஷ்டங்கொண்டதையும் சிவபெருமானறிந்து, ஆலால சுந்தரரையும் அம்மாதர்களையும பூமியில் பிறக்கும்படி கட்டளையிட்டனர். அக்காரணத்தினால் திருமுனைப்பாடி நாட்டிலே திருவாரூரிலே வாழ்கின்ற சடையனாரென்னும் ஆதிசைவபபிராமணருக்குத் திரு மைந்தராய் இசைஞானியார் திருவயிற்றினிடமாகத் திரு வவதாரஞ் செய்து நம்பியாரூரர் என்னுந் திருநாமம் பெற்று வளர்ந்து வருகையில், அந்நாட்டரசராகிய நரசிங்கமுனையரையர் சடையனார் சம்மதத்தின் மேல் தமக்குப் புத்திரராகப் பெற்றுக் கொண்டு தமதுகுலத்துக்குரிய வில்வித்தை முதலாகியதும, பிராமணகுலத்திற்குரிய வேதாகமசாஸ்திரங்களையுங் கற்பித்துச் சடங்கவி சிவாசாரியார் குமாரத்தியை மணம்பேசி நம்பியாரூரருக்கு விவாகச்சடங்கு நடத்தும்போது, சிவபிரான் ஓர் கிழப்பிராமண வடிவங்கொண்டு வந்து தமக்கு ‘அடிமை’ என்று வழக்கிட்டு அழைத்துக்கொண்டு அருட்டுறை யென்னும் ஆலயத்துட் சென்று மறைந்து விடைமேலிவர்ந்து நீ முன்னமே, நமக்குத் தொண்டன், ஆகையால் இப்போது உன்னைத் தடுத்தாட் கொண்டோம்.

இன்று முதல் நீ நம்மைப் பித்தன் என்று அடியெடுத்துப் பாடக்கடவை. என்றா அருளிச்செய்ய;அவர் அவ்வாறே பாடுவாராயினர். பின்னும் இவ்வாறே தலமெங்கும் பாடக்கடவையென்று கட்டளையிட, அதைக்கேட்டுச் சுந்தரரும் தலங்கடோறுஞ் சென்று திருப்பதிகங்கள் பாடி ஆநந்தக்கூத்தாடித் திருவாரூரி லிருக்க, முன்னமே பார்வதி யாரின் தோழிக ளிருவரில் சுவாமியின் கட்டளைப்படி கமலினியென்பவர் திருவாரூரில் உருத்திர கணிகை மரபில்உற்பத்தியாகி, பரவையார் என்னுந் திருநாமம் பெற்று வளர்ந்தனர். சுந்தர மூர்த்திகள் அப்பெண்ணைப்பரமசிவத்தின் திருவருளால் விவாகஞ் செய்து கொண்டனர்.

ஒருநாள் திருவாரூர் வீதிவிடங்கப்பெருமானைத் தரிசிக்கச் செல்லுகையில் தேவாசிரிய மண்டபத்திற் குழுமியிருந்த அடியார்களைத் தரிசித்து இவர்க்குயான் அடிமையாவதெக்காலமென எண்ணுகையில், 'தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேன்' என்றெழுந்த அசரீரியை முதலிற் கொண்டுதிருத்தொண்டத் தொகை யருளிச்செய்தனர். சிவஸ்தலயாத்திரைசெய்து குண்டையூரை யடைந்து அடியவர்க் கமுதிடும்படி குண்டையூர்கிழார் கொடுத்த நெற்குவியலைத் திருவாரூருக்குப் பூதகணங்களாற் றருவித்தவர். திருப்புக லூரிலே செங்கல்லைப் பொன் னாக்கியவர் திருமுது குன்றத்தில் இறைவனுலருளப்பட்ட பொன்னை மணிமுத்தா நதியிலிட்டுத் திருவாரூர்க்கமலாலயத்தி லெடுத்தவர்.

சுந்தரமூர்த்திசுவாமிகள் பற்பல சிவஸ்தலங்களைத் தரிசித்துத் திருவொற்றியூர்க்கெழுந்தருளிச் சுவாமியைத் தரிசித்துக்கொண்டிருந்தனர். அப்போது ஞாயிறு என்னும் ஊரிலே ஞாயிறுகிழார் என்பவருக்கு அனிந்திதை புத்திரியாராகப் பிறந்து சங்கிலியார் என்னுந் திருநாமம் பூண்டு மிகுந்த சிவபக்தியுடன் திருவொற்றியூரை யடைந்து திருத்தொண்டுசெய்துகொண்டிருப்ப, அப்பெண்ணைக் கண்டு, விருப்பங்கொள்ள, (அதைச் சிவபெருமான் மூலமாயறிந்த சங்கிலியார் தம்மை விட்டுப் பிரியாதபடி உறுதிமொழியை விரும்ப, அங்ஙனமே மகிழமரத் தடியில் சுவாமி முன்னிலையில் பரவசஞ் செய்து கொடுத்து) விவாகஞ்செய்து கொண்டு சிலநாளிருந்து திருவாரூருக்குப் போகப் புறப்பட்டுத் திருவொற்றியூர் எல்லையைக் கடந்தவுடனே தமது இரண்டு நேத்திரங்களும் பார்வைநீங்க, மனவருத்தத்தோடு திருவெண்பாக்க மடைந்து பதிகமோதி ஊன்றுகோற் பெற்றுக் காஞ்சியை யடைந்து பதிகமோதி ஒருகண் பெற்றுத் திருவாரூருக்குச்சென்று மற்றொரு கண்ணும் பெற்றுச் சிவபெருமானைத் தூது விடுத்துப் பரவையாருடலை நீக்கி, அவ்விடத்திற் சில நாளிருந்து மலைநாட்டுக்கெழுந்தருளினர். அங்கு அவிநாசி வழியில் முதலையுண்ட பிள்ளையை மீட்டுக்கொடுத்துச் சேரமான் பெருமாளுயனர்

எதிர்கொண் டுபசரிக்க இருவருந் திருவஞ்சைக்களத்தி லிருக்கையில் பரமசிவத்தின் உத்தரவின்படி தேவர்கள் வெள்ளையானையையனுப்ப, சுந்தரமூர்த்தி சுவாமிகள் வெள்ளையானையின் மீதும், சேரமான்பெருமாணாயனார் குதிரையின் மீதுமாக எழுந்தருளித் திருக்கயிலாயத்திற்குச் சென்று இருவருஞ் சுவாமியின் திருவருள் பெற்று ஆனந்தமடைந்திருந்தார்கள். பார்வதி தேவியாருத்தரவின்படி பரவையாரும சங்கிலியாருங் கைலையை யடைந்து முன்போல உமையம்மைக்குப் பணிவிடை செய்துகொண் டிருந்தார்கள்.

இவர் சரிதையை, " தண்கயிலை யதுநீங்கி நாவ லூர்வாழ் சைவனார் சடையனார் தநயனாராய், மணபுகழ வருட்டுறையா னோலைகாட்டி மணம்விலக்க வன்றொண்டா யதிகை சேர்ந்து, நண்பினுட னருள்புரிய வாரூர் மேவி நலங்கிளரும் பரவை தோணயந்து வைகித, திண்ருலவும் விறன்மிண்டர் திறல்கண் டேத்துந் திருத்தொண்டத் தொகையருளாற் செப்பினரே. செப்பலருங் குண்டையூர் நெல்லழைத்துத் திருப்புகலூர்ச் செங்கல் செழும்பொன்னாய்ச்செய்து, தப்பின்முதுகுன்றர்தரும் பொருளாற் றிட்டுத் தடத்தெடுத்துச் சங்கிலி தோளசார்ந்துநாத, னொப்பிறனித் தூது வந்தாறுடு கீறி யுறுமுதலை சிறுமதலை யுமிழ்கல்கி, மெய்ப் பெரிய தனிப்பிறழி யருளாற் சேர வேந்தருடன் வடகயிலை மேவி னாரே." வெனுந் திருத்தொண்டர் புராணசாரச் செய்யுள்களானறிக.

சுந்தரானந்தர்—திருவள்ளுவநாயனார் சீடர்களிலொருஞானி.

சுந்தரி—மாலியவந்தன் மனைவி. நர்மதையெனுங் கந்தர்வப் பெண் புத்திரி.

சுந்தரிபீடம்—சத்திபீடங்கள் அறுபத்து நான்கனு ளொன்று. இது வேதாரணியத்திலுள்ளது.

சுந்தரேசபாதசேகரபாண்டியன் — மதுரையையாண்ட பதினெட்டாம் பாண்டியன். சோழனை மடுவில் வீழ்த்தியது, உலவாக் கோட்டையருளியது, மாமனாகவந்து வழக்குரைத்தது ஆகிய திருவிளையாடல்கள் இவன் காலத்தே நிகழ்ந்தன.

சுந்தன்—ஓரியக்கன். தாடகை கணவன். இவன் புத்திரர் மாரீசன் சுபாகு.

சுந்தோபசுந்தர்—இரணிய கசிபன் மரபில் நிசுந்தன புத்திரர். இவர்கள புத்திரர் சும்பநிசும்பர்கள் பிரமனைநோக்கிக் கடுந்தவஞ்செய்து விரும்பிய வடிவமெடுக்கவும் கருதிய விடஞ்செல்லவும் பிறராற் கொல்லப் படாமலும் வரங்களைபெற்றுப் பலரையும வருத்துகையில், தேவர் சூழ்ச்சியால் அவர் முன்னுற்ற திலோத்தமையைக் கண்டு இருவரும்மோகமிக்கு, நீஎங்களில் யாருக்கு மனைவியாகுவை யென, உங்களில் வீரனுக்கே யுரியேனென, இருவரும் போர்புரிந்து ஒருவரை யொருவர்வெட்டிக் கொண்டிறந்தனர்.

சுபதந்தி—புஷ்பதந்தமென்னுந் திக்கயத்தின்பிடி.

சுபத்திரன்—(1) வசுதேவன் மகன்

இவன்தாய் பௌரவி (2) கேமசரி பிதா [சிவக.]

சுபத்திரை—கண்ணன் தங்கை. அர்ச்சுனன் மனைவி. அபிமந்யுவை யீன்றவள்.

சுபர்தன்—வாசவதத்தை யென்னும் நூலாசிரியன். விக்கிரமார்க்கன் காலத்து வடமொழிப் புலவரிலொருவன்.

சுபலன்—காந்தாரநாட்டரசன். இவன் புத்திரன சகுனி. புத்திரி திருதராட்டிரன் மனைவி காந்தாரி.

சுபாகு—(1) சேதிநாட்டரசனுன வீரவாகு புத்திரன். இவன் சகோதரி சுநந்தை. (2) இராமன் தம்பியாகிய சத்துருக்கினனது ஜேஷ்டகுமாரன். (3) கண்ணன் பரமபரையில்வந்த பிரதிவாகுவின் மகன். (4) ராக்ஷசன் - தாடகை மகன். மாரீசன் சகோதரன். விசுவாமித்திரயாகத்திலே இராமனுற் கொல்லப்பட்டவன்.

சுபார்சுவன்—(1) சம்பாதிமகன் (2) ராக்ஷஸன் - சுமாலிமகன் (3) துவிமீடன் வமிசத்துத் த்ருடநேமி புத்திரன். இவன் மகன் சுமதி. (4) ஜைனமதஸ்தாபகரான இருபத்துநான்கு தீர்த்தங்கரரில் ஏழாவதாகத் தோன்றியவர்.

சுபு—யதுமரபினனுன கம்சன் தம்பி.

சுபூதி — புத்தசிஷ்யர் பதின்மரிலொருவர்.

சுப்தக்கினன்—மாலியவந்தன் மகன்.

சுப்பிரதீகம் — ஈசான திசைக்குக் காவல்பூண்ட திக்கயம். இதன்பிடி அஞ்சனை.

சுப்பிரதீகன்—ஒரு வேதியன். இவன் தன் தமையனை வஞ்சிக்கும்படி தந்தை திரவியங்களை யபகரித்ததற்காகத் தமயனுல் யானையாகும்படி சபிக்கப் பெற்றவன்.

சுப்பிரபேதம் — இருபத்தெட்டுச் சிவாகமங்களிலொன்று. இது சிவபெருமான் திருக்கொப்பூழும் ஒரேஉபபேதமும் மூன்றுகோடி கிரந்தமுமாக வுள்ளது.

சுப்பிரபை—மூதல் நாபாகன் மனைவி. வைசியப்பெண.

சுப்பிரமணியர்—குமாரக்கடவுள்.

சுப்பிரமன்—சும்ஹனிற் காண்க.

சுப்பிரயோகை—ஒருநதி. சையகிரியிலுதித்து தக்ஷிண வாகினியாகப் பாய்வது.

சுபபிரியன்—(1) ஒரு வணிகன். கப்பல்யாத்திரை செய்கையில், தாருகனெனும் இராக்கதனுல் துன்புற்றுச் சிவப்பிரசாதத்தால் அவனை வென்றவன். தாருகனிற் காண்க (2) தேவகிரியிலிருந்த சுதன்மனெனும் அந்தணன்மகன். இவனைப்பற்றிய விடயங்களைக் குஸ்மையிற் காண்க. [சைவபு]

சுமங்களர்—புத்தர்களில் ஏழாவதாகத் தோன்றியவர்.

சுமதன்—விசுவாமித்திரன் புத்திரரிலொருவன்.

சுமதி—(1) இக்ஷ்வாகு தம்பியாகிய நிருகன்மகன். (2) ருஷபன் மகனுகிய பரதன்மகன். (3) புதன்மரபில் மதிசாந்திரன் மகன் (4) புதன் மரபில் துவிமீடன் சந்ததியாகிய சுபார்சுவன் மகன் (5) வேதவித்தாகிய பாரன் மகன் (6) அரிஷ்டநேமிமகள். சகரன் இளையமனைவி. இவள்பா லுதித்த அறுபதினுயிரம் புதல்வரும் கபிலராற் சாம்பராக்

கப்பட்டனர் [சகரரிற்காண்க] (7) சுரமஞ்சரிதாய் [சீவக] (8) ஜைன மதஸ்தாபகரான இருபத்துநான்கு தீர்த்தங்கரரில் ஐந்தாவதாகத் தோன்றியவர்.

சுமகசன்—(1) உன்முகன் மகன். அங்கனுக்கிளவல். (2) இக்ஷ்வாகு மரபினன். ஹரியசுவன் மகன். இவன் மகன் திரிதன்வன். சம்பூதியின் நாமாந்தரம்.

சுமந்தன்—(1) வியாசர் மாணவரான ஓரிருடி. இவர் அதர்வணவேதி. (2) ஜைமினிபுத்திரன.

சுமந்திரன்— (1) புரூரன் மரபினனு ஜன்னுமகன். (2) தசரதன் சாரதியும் மந்திரியுமாயிருந்தவன்.

சுமந்திரி—சடியரசன் முதன் மந்திரி.

சுமந்து—ஜன்னுமுனிவர் புத்திரன்.

சுமாலி—(1) இராக்கதன். சுகேசன் மகன். மாலியவந்தன் தம்பி. இராவணன் மாதாமஹன். (2) கம்சனுக்கிளவல். பலராமனாற் கொல்லப்பட்டவன்.

சுமித்திரன்—(1) யது மரபினனான பஜமானன் பௌத்திரன். விருஷ்ணிமகன். (2) யதுமரபில் வசுதேவன் தம்பியாகிய அநீகன் மகன். (3) இக்ஷ்வாகு வமிசத்திற் கடைசியில்வந்த மன்னவன். அபிமன்னனாற் கொல்லப்பட்ட பிருகத் பலனுக்கு முப்பதாம்வழித்தோன்றல்.

சுமித்திரை—(1) தசரதன் மனைவியரி லொருத்தி. இலக்ஷ்மண சத்துருக்கினரைப் பெற்றவள். (2) சுலோசனனெனும்வேதியன்மகள். மணப்பருவத்தே சோரநாயகனாக ஒரு வேதியனை [ஆதிசேடனைக்] கூடிச் சாலிவாகனனைப் பெற்றவள். சாலிவாகனனிற் காண்க.

சுமேதர்—புத்தர்களில் பதினன்காவதாகத் தோன்றியவர்.

சுமேரு — வடக்கே துருவநக்ஷத்திரத்தை நோக்கிநிற்கும் மேருவின் சிகரம். மேருவின் வாற்பக்கம் குமேருவெனப்படும். அது தெற்கு நோக்கியிருக்கும். வடவாமுகமெனப் பெயர்பெறும். மேரு அநேக தேவகணங்கட்கு வாசஸ்தானம், இதனை மநுஷர் அடைய முடியாதென்பது புராண சம்மதம்.

சும்பநிசும்பர்—இவர்கள் இரணியகசிபன் மரபினர். சுந்தோப சுந்தர்புத்திரர். புஷ்கரத்திலே பிரமனை நோக்கித் தவஞ்செய்து பேராற்றலுற்று இந்திராதி தேவர்களைத் துன்பு செய்துழன்று இறுதியிற் காளியாற் சங்கரிக்கப் பட்டனர்.

சும்ஹன்—பலியின் கடைமகன். இவனால்நிர்மிக்கப்பட்டது சௌம்ஹிக நகரம். சுப்பிரமனென்றும் பெயருடையான்.

சுயசை—திருநந்திதேவர் மனைவி.

சுயஞ்ஞன் — (1) தசரதன் புத்திரகாமேஷ்டி யாகத்தை நிறைவேற்றியகர்த்தாக்களி லொருவர். (2) உசீநரதேசத் தரசன். சத்துருக்களால் யுத்தத்தில் வீழ்த்தப் பட்டபொழுது பந்துக்களது துக்கத்தில் மூழ்கிக்கிடக்க, இயமன்ஒரு பாலவடிவேற்றுத் தத்துவோபதேசஞ் செய்தனன்.

சுயம்புநாதர்— திரு ஆக்கூரில் சிவபிரானுக்கு வழங்குந் திருநாமம்.

சுயம்வரராஜா— இக்ஷ்வாகு வமிசத்திற் சாகேதநகர மன்னனாக வந்தவன். இவன் மனைவி சித்தார்த்தி

தேவி. புத்திரர் அபிநந்தனனென்னும் நான்காவது ஜைனதீர்த்தங்கரர்.

சுர்சை—(1) அசுரேசன் புதல்வி. காசிபமுனிவர் மனைவி. மாயையில் வல்லவளாய் மாயையென்னும் பெயரேற்றவள். இவளே சூரபன்மன் சிங்கமுகன் தாரகன் அஜமுகி இவர்களை யீன்றவள். (2) நாகர்கள் தாய். அநுமான் சீதையைத் தேடி இலங்கைக்குச் செல்வழியில் வழியடைத்து நின்று அநுமான இவளை வயிற்றிற் புகுந்து புறஞ் செல்ல வயிறுகிழிந்திறந்தவள்.

சுரதமாரபாண்டியன் — பராக்கிரம பாண்டியனுக்குப்பின் மதுரையை யாண்டவன். இவன் அறுபதெட்டாம்பாண்டியன்.

சுரதன்—(1) ஒரிருடி. ஜன்னு புத்திரன் (2) சுவேதன்தம்பி. சுவேதனுக்குப்பின் விதர்ப்ப நாட்டிற் கரசனானவன்.

சுரநிக்தனை—ஜேஷ்டாதேவி யிடம் வருணனுக்குப் பிறந்தபெண். அதர்மன் தங்கை.

சுரபி—(1) காசிபர் மனைவியரி லொருத்தி. தேனுவுடன் கந்தர்வரைப் பெற்றவள். (2) காமதேனு. இது விரும்பியவற்றை யெல்லாங் கொடுக்கவல்லது.

சுரபு—உக்கிரசேனன் புத்திரி. சியாமகன் மனைவி.

சுரமஞ்சரி—(1) ஒருவகைச் சங்கீத சாத்திரம். (2) சீவகன் மனைவியரி லொருத்தி. ஆடவரைப் புணர்வதில்லையென விரதம் பூண்டவள். சீவகன் சங்கீதத்திற்கு மயங்கி, அவனை மணந்தவள்.

சுரமை—பிரஜாபதியரசன் நாடு.

சுராதிராஜன்—சோழமண்டலஸ்தாபகனான முதற்சோழன் [கலிங்கத்துப்பரணி]

சுராஷ்டிரன்—(1) நிர்விருதருஷிசாபத்தால் மிருகமான உற்பலாவதியைப் பரிசித்து அவளிடம் தாமசமநுவைப்பெற்றவன். (2) காசியபன் புத்திரரி லொருவன். தீர்க்கதமன்பிதா.

சுரிகைச்சவுண்டையர் — நிஷ்டைகைவந்தவர். தன் இஷ்டலிங்கத்திற்கு அன்னத்தை நிவேதித்து அதனையுண்ணச்செய்த வீரசைவர்.

சுருசி—உத்தானபாதன் இளைய மனைவி. உத்தமனைப்பெற்றவள்.

சுருதகீர்த்தி—(1) அர்ச்சுனனுக்குத் திரௌபதியிடம் பிறந்தமகன். (2) வசுதேவன் தங்கை. இவன் கேகயராசனான திருஷ்டகேதுவை மணந்தவள். (3) விக்கிரமார்க்கன் பாட்டன். தனக்குப் புத்திரரின்றிமகள் மகனான விக்கிரமார்க்கனுக்கு அரசுரிமையைக் கொடுத்தவன். (4) குஜத்துவஜன் புத்திரி. சத்துருக்கினன்மனைவி.

சுருதசிரவன்--ஒரிருடி. சோமசிரவன் பிதா. ஜனமேஜயன் காலத்தவன்.

சுருதசிரவை — வசுதேவன் தங்கை. தமகோஷன் மனைவி. சிசுபாலன் தாய். சாத்துவதியென்றும் பெயர்.

சுருதசேனன்—(1) சகதேவனுக்குத் திரௌபதியிடம் பிறந்த மகன். (2) ஜனமேஜயன்.

சுருதசோமன்—வீமனுக்குத் திரௌபதியிடம் பிறந்தமகன்.

சுருததேவன்—(1) திருமாலின் பரிசனர்களி லொருவன் (2) மிதிலாபுரியிலிருந்த ஒருவிஷ்ணுபக்தன்.

சுருததேவி — வசுதேவன் தங்கை. விருத்தசர்மன் மனைவி. தந்தவத்திரன்தாய்.

சுருதமுக்யன்—வசுதேவன் மக்களிலொருவன். சகதேவியிடம் பிறந்தவன்.

சுருதவர்மன்—துர்யோதனன்தம்பியரிலொருவன்.

சுருதன்—இக்ஷ்வாகுவமிசததுப் பகீரதன் புத்திரன். சுஹோத்திரனெனவும்படுவன்.

சுருதாயு—(1) புரூரவன்மகன். வசுமந்தனென்றும பெய ருடையான். (2) கலிங்கநாட்டரசன். இவனும் இவன் சகோதரர்களும் பாரதயுத்ததில் வீமசேனனாற் கொல்லப்பட்டார்கள். (3) மிதிலா நகரத்து அரிஷ்டநேமி மகன்.

சுருதாயுவன்—ஓரரசன். வருணன்புத்திரன். இவன் வருணனிடம் பெற்றகதாயுதத்தைக் கண்ணன் மேல் மோத அஃதவன் கழுத்தில் மாலையாகவிழுந்து மீண்டு வந்து தன்னையே கொல்லப்பெற்றவன்.

சுருதி—வேதத்திற்காணக.

சுருதிகீதங்கள்—சர்வசகமு மொடுக்கமானபோது வேதங்கள் பரமேசுவரனைச் செய்ததுதிகள். சிறந்ததத்வார்த்த முடையன வென்பர்.

சுலக்ஷணை—ஒருபெண். காசியில் உத்தராதித்தனைப் பூசித்து முத்திபெற்றவள்.

சுலபை—ஒருமாது. பரமதத்துவ ஞானமுடையாள். இவள் ஞானியான ஜனகமகாராஜன் மனநிலை யுணர அவருடன் சம்வாதஞ் செய்தவள்.

சுலோசனன்—ஒருவேதியன். சாலிவாகனனைப்பெற்ற சுமித்திரை யென்பாள் பிதா.

சுவசை—பிரஜாபதி மனைவி. அநிலன் தாய்.

சுவணகேது—அசுவகண்டன் படைவீரரிலொருவன். [சூளா]

சுவபர்க்கன்—யது மரபினன். பிரசிவன் மூத்தகுமாரன்.

சுவயம்பூதம்—சிவாகமங்கள் இருபத்தெட்டனுளொன்று. இது சிவபிரான் மூலையும், மூன்று உபபேதமும், ஒன்றரைக்கோடி கிரந்தமுமாகவுள்ளது.

சுவரோசி— புஞ்சிகஸ்தலை யெனும் அப்சரசைப் பாரனெனும் இருடிகூடிப்பெற்ற களாவதியின் பத்மினிவித்தையால் மயக்குண்டு அவளைமணந்தவன்.

சுவர்ணரோமன்—மகாரோமன்மகன் இவன் மகன் ஹிருஸ்வரோமன்.

சுவர்ணஷ்டீவி—சிருஞ்சயன்மகன்.

சுவர்ப்பானவி — ஆயுவின் மனைவி. இவள் மகன் நகுஷன்.

சுவர்ப்பானன் — (1) தனுபுத்திரரிலொருவன். (2) விப்பிரசித்திமகன் இராகுவிற்காண்க.

சுவலனரதன் —அமராபுரத் தரசன். சடியரசன் தம்பி. [சூளா]

சுவாகாதேவி—அக்கினிதேவன் மனைவி. ஒருகாலத்தில் அக்கினி சப்தருஷிகளின் மனைவியரை விரும்பி அந்தச் சந்தாபம் பொறுக்காது காட்டிற்குப்போனபோது, கணவன் கருத்துணர்ந்த இவள் அம்முனிமாதரில் அருந்ததி நீங்கினர் வடிவத்தை முறையே யெடுத்து வெவ்வேறு காலங்களிற்கலந்து அவன் வேட்கையைத் தணிவித் தவள். அருந்ததி வடிவேற்க முடியாமல் அவளைப் புகழ்ந்து பல சிறந்தவரந்

தந்தவன்.

சுவாகிதன்—யது மரபினன். விருஜவந்தினன் மகன்.

சுவாகு—சுபாகுவிற்காண்க.

சுவாஸமம—ஒருநதி. வாமை யென்றும் பெயருறும்.

சுவாயம்பு—பிரமமானசபுத்திரனாகிய ஒருமநு. மனைவி சதரூபை புத்திரர் பிரியவிரதன் உத்தானபாதன் புத்திரிகள்பிரசூதி ஆகூதி தேவகூதி.

சுவாரோசிஷன் — சுவரோசி புத்திரன். நெடுங்காலந்தவஞ்செய்து மநுவானவன். இவன்தாய் மனோரமை.

சுவாலாமாலி—ஊர்வை மகவ. ஔர்வனென்றுஞ் சொல்லப்படுவன். ஊர்வனிற் காணக.

சுவிநதிரம்—ஒரு சிவஸ்தலம். இது மலைநாட்டிலுள்ளது.

சுவிபு—காசிராசர்களி லொருவன் - திருஷ்டகேதன் மகன் - இவன் மகன் சுகுமாரன்.

சுவிரதன்—உசிநரன ஐந்தாம புத [திரன்.

சவீரன்—(1) சிபியின் இரண்டாம் புத்திரன். சவ்வீரதேசத்தவன். (2) வசுதேவன் தம்பியரிலொருவனான தேவசிரவசன் மகன்.

சுவேதகி—இராஜ ருஷிகளிலொருவர். இவர் யாகஞ்செய்கையில், பன்னிருவருடகாலம் இடையறாது நெய்யைச் சொரிந்தமையால் அக்கினிக்குத் தீபனக்கினிமாந்தமுண்டாகி, காண்டவவனத்தை யுண்ணற் கிணங்கியது.

சுவேதகேதன்—(1) அஷ்டவக்கிரன் தாய் மாமனாகிய ஒரிருடி. இவன் தன் மகன்மேற் கோபமுண்டு அவனையம புரத்திற்கனுப்ப, அவனும் அங்ஙனமே போய்த்திரும்பினன். (2) உத்தாலகன் மகன்.

சுவேதவராகம்—ஜலத்தில் முழுகிய பூமியைப் பண்டுபோல் நிலைநிறுத்த திருமால் கொண்ட வெண் பன்றிவடிவம்.

சுவேதவாகனன் — அருச்சுனனுக்குரிய பெயர்களிலொன்று. நான்கு வெண்புரவிகள் பூட்டிய தேரேறி நடாததுபவன் என்பது பொருள்.

சுவேதன்—(1) சுக்கிரன. (2) விராடராசன் மகன். உத்தரன் தந்தை - பாண்டவரை அஞ்ஞாதவாசத்தில் பாதகாத் துபசரிததவன (3) ஒரிராஜருஷி காளாஞ்சன தீர்த்தக் கரையில் சிவபெருமானை நோக்கித் தவஞ் செய்து கொண்டிருக்கையில், இயமன் பிடிக்கவர. சிவபெருமானால் தடுத்துக் காக்கப்பெற்றவன். (4) விதர்ப்ப நாட்டரசன். சுதேவனமகன்.

சுவேலம்—இராமராவணயுத்தத்தில், இலங்கையில் வானரசேனைகள் தங்கியமலை.

சுஷேணன்—(1) கர்ணன்மகன். சாத்தகியாற் கொல்லப்பட்டவன். (2) கண்ணனுக்கு உருக்குமணியிடம் பிறந்தமகன். (3) வானரன். வருணனாற் பிறந்தவன். உருமைதந்தை சுக்கிரீவன் மாமன் (4) வசுதேவன் புதல்வரி லொருவன். கம்சனாற் கொல்லப்பட்டவன்.

சுஹோத்திரன்— (1) க்ஷத்திரவிருத்தமகன். காசியபன் குசன் கிருத்சிமதன் இவர்கள் பிதா. (2) புருரவன் மரபில், பிருஹதக்ஷத்திரன் மகன். இவன்மகன் ஹஸ்திகன். (3) கௌரவர் மரபில், சுமகசுமகன் (4) இக்ஷ்வாகு மரபினனான பகீரதன்

புத்திரரிலொருவன். இவனுக்குச் சுருதனென்றும் பெயர். (5) புரூரவன் மரபில் வீமன்பௌத்திரன். இவன்மகன் ஜனகன். மகாநீதிமான் இந்திரன் இவனை வியந்து நண்டு ... முதலியவுடிவாகப் பொன்மாரிபொழிவிக்க, அவற்றையெல்லாங்கொண்டு பலபாகங்களாச் சிறப்பாகச்செய்து பலருக்கு அப்பொன்னைத்தானமாரியாக வழங்கியவன். (6) சகதேவன்மகன. இவன்தாய் விஜயை.

# சூ

சூக்ஷ்மபீடம்—அறுபத்து நான்கு சத்திபீடங்களிலொன்று. இது ஆம்பிராதகேசுரத்திலுள்ளது.

சூக்ஷ்மம்—இருபத்தெட்டுச் சிவாகமங்களிலொன்று இது சிவபெருமானுக்குக் குய்யமும், ஒரேஉபபேதமும், பதுமமந்திரந்தமுமாகவுள்ளது.

சூடாமணிநிகண்டு—தெய்வப்பெயர்த்தொகுதிமுதல் பல்பெயர்க் கூட்டத்தொருபெயர்த்தொகுதியிறுதியாகப்பன்னிரு தொகுதிகளுடையது. திவாகரம் பிங்கலந்தை யென்பவற்றிற்கு வழிநூல். இதனாசிரியர் பெருமண்டூரென வழங்கும் வீரபுரத்திலிருந்தவரும், அருகதேவன் சரிதையைப் புராண மாகச் செய்தவரும்; மண்டல புருடனெனும் பெயருடையவருமாகிய ஒரு ஜைனர். இதனை யாக்குவித்தோர் இவராசிரியரும் திருநறுங்குன்றையூரிலிருந்தவருமாகிய குணபத்திரர். இது கிருஷ்ணராய னெனும் பிரபுவின் காலத்திற் செய்யப்பட்டதென்பது அந்நூலாசிரியர் வாக்கானறியக்கூடியது.

சூடிக்கொடுத்தாள்— வைணவமநோத்தாரகர்களான ஆழ்வார்கள் பன்னிருவரிலொருவர். ஆண்டாளென்றும பெயருடையவர். பெரியாழ்வாருக்குப் புத்திரியாராகத் துளசியிலே பிறந்தவர். பெரியாழ்வார் திருமாலுக்குப் புஷ்பகயிங்கரியஞ்செய்து வருகையில் அவர்கட்டிய மலர்மாலைகளையெல்லாம் பிதாவறியாது கூந்தலில்முடித்துப்பின்னர்க் குடலையில் வைப்பது இவர் வழக்கம். ஒருநாள் அதில் ஒருமயிர் சிக்கிக்கொண்டிருக்கக் கண்ட ஆழ்வார் குமாரத்தியைக் கண்டித்துப் பயமுறுத்தி வேறுமாலை சேகரஞ்செய்து திருமாலுக்குச்சமர்ப்பிக்க அது விலக்கப்பட்டது. இறுதியில் இச்சூடிக் கொடுத்தா ளென்னும் அம்மையார் திருமாலுக்கு மனைவியாயினர்.

சூதசங்கிதை— ஸ்காந்த புராணத்தின் சங்கிதைகள் ஆறனுளொன்று. ஆறாயிரங் கிரந்தங்களடங்கியது. இது சூதமுனிவரால் வியாசமுனிவர் பொருட்டுச் செய்யப்பட்டது.

சூதபுத்திரன்—[சூதன்-தேர்ப்பாகன்] சூதன் வளர்க்கவளர்ந்தமையின் கர்ணனுக்கு நாமாந்தரம்.

சூதமாகதர் — அரசர்கட்கு உற்சாக முதலியன உண்டுசெய்யு நிமித்தம் பாடுவோர். இவர்கள் பிருதுபிறந்தயாக சுத்திகாலத்தில் உதித்தவர்களின் மரபினர். இவர்களை வந்தியரென்றும் சூதரென்றும் தமிழ் நூல்கள் கூறும்.

சூதமுனி—ஓரிருடி, வியாசர் மாணவர்,

வைந்நியனெனும் அரசன் செய்த வேள்வியில், இந்திரனுக்குக் கொடுக்க வேண்டிய அவிப்பாகமும், குருவான பிரகஸ்பதி பகவானுக்குக் கொடுக்கவேண்டிய அவிப்பாகமும் ஒன்றாய்க் கலக்கப்பட்ட படியால், தைவ கதியால் அதனிடத்துண்டானமையின், உரோம ஹர்ஷணரென்றும், சிஷ்யகுரு அவிப்பாகங் கலந்த தனிடத் துண்டானமையின் வர்ணவிகிர்த ரென்றும் பெயர் பெறுவர். (2) இவர் புதல்வரும் சூதரெனப்படுவர். அவரும் வியாச சீடர். இருவரும் சிவபக்தியிற் சிறந்தவர்கள். பலபுராணங்களைச் சொன்னவர்கள். இவர்களில் இரண்டாவது சூதரே ஸ்காந்தங் கூறினவ ரென்பது விசதம். இதனுல், சூதரென்றும், சூதபுத்திரரென்றும்வடநூல்களிலவழங்கிவரும். இவரே நைமிசாரணிய வாசிகளுக்குப் பலபுராணங்களையுங் கூறியவர். மகாதபஸ்வி.

சூத்கிரகன்— மகததேசமன்னன் சுதர்சனனுக்குமந்திரி. இவன்அரசனைக்கொன்று அரசுரிமையை யபகரித்தவன்.

சூத்திரங்கள்—சுபாசுப கருமங்களைச் செய்யவேண்டிய விதிகளை யுணர்த்தும் பதினெட்டு நூல்கள். அவற்றைச் செய்தோர்: போதாயனர் ஆபஸ்தம்பர் சத்தியாஷாடர் திராஹ்யாயனர் அகஸ்தியர் சாகல்யர் ஆசுவலாயனர் சாம்பவர் காத்தியாயனர் வைகானசர் சௌநகியர் பாரத்துவாசர் அக்கினிவைசியர் ஜைமினி வாதுலர் மாத்தியந்தினர் கௌண்டின்னியர் கௌஷீதகர் ஹிரண்யகேசர். அவை யவ்வவர் பெயரான் வழங்கும்.

சூத்திரபிடகம்—பௌத்தாகம மூன்றனுள் இரண்டாவது. இது தீர்க்க நிகாயம் மத்திமநிகாயம் ஸம்யுக்த நிகாயம், அங் கோத்தர நிகாயம் க்ஷுத்திரக நிகாயமென ஐவகையினை யுடைத்து. [நிகாயம்=கூட்டம்]

சூரசூதன்—அருணன்.

சூரசேனம்—மதுரா புரியை யிராஜதானியாகவுடைய ஒருதேசம். சத்துருக்நன் மகனுன சூரசேனனுல் அரசு செய்யப்பட்ட நாடாகலின் இப் பெயரேற்றது. இத்தேசத்து வழங்கும் பாஷை சௌரசேனி அல்லது சௌராஷ்டிர மெனப்படும்.

சூரசேனன்—(1) கார்த்தவீரியார்ச்சுனன் இரண்டாம் புத்திரன். (2) சத்ருக்நன் மகன்.

சூரபதுமன் } பிரமமானச புத்திரரா
சூரபன்மன் } னகாசிப முனிவருக்கு மாயையின் கர்ப்பத்தில் உதித்தவன். சூரன் பதுமனுடன் சேர்ந்து ஒரே தேகமாகத் தோன்றினமையின் சூரபன்மனெனப் பட்டனன். இவன் தம்பியர் சிங்கமுகன், தாரகன். தங்கை அஜமுகி. சூரபன்மன் சிங்கமுகன் தாரகனெனு மிவர்களைக் காசிபர் விளித்துத் தவத்தினலேயேபெரும்பாக்கியங்களையடையவேண்டு மென்று போதித்து, முறைமுதலியன கற்பித்து அசுர குருவாகிய சுக்கிரனையடைக வென்றுவிடுப்ப, அநேக காலங் கடுந்தவஞ்செய்து சிவபிரானைத் தரிசித்து ஆயிரத்தெட்டு அண்டங்களையும் நூற்றெட்டுகம் அரசசெய்யும்

காரமும் மனோவேகத்தேர் சிங்காசனம் சூலமுதலியவு மருளப்பெற்று, அதிப்ரபலவானாய்த் தான்பதுமகோமளையை மணந்து தம்பியர்க்கு விவாகஞ்செய்து வெவ்வேறிடங்களிலமர்த்திப் பானுகோபன முதலிய பலபுதல்வரைப் பெற்றுச் சர்வராசாங்க பத்தியமுற்று, பிரமன் வேதமோதிச் செல்லவும் நினைக்குந்தோறுந் திருமால்வந்து சேட்பணயற்றிற்கு விடைகூறவும், வாயுவீதிகளைச் சுத்தஞ் செய்யவும், வருணன் தெருக்களில நீர் தெளிக்கவும், பலதேவர் பல டணிவிடை புரியவும், சிலதேவர் கடலிலுள்ள மச்சங்களைப்பிடித்துசவவும் நிகரற்றுத் தருக்கிததருக்கி, தேவர்களைச் சிறை யிட்டும், தேவ மாதர்களை அசுரமாதர்கட்குப் பணிப்பெண்களாக்கியும் இருத்தலைப் பொறாத திருமால் பிரமன் இந்திரன்முதலிய தேவர் வேண்டுகோளால் சிவாக்கினைப்படி குமாரக்கடவுள் திருக்கைலாயத்தினின்றும் புறப்பட்டு வழியில் மாயம்புரிந்த கிரவுஞ்சகிரியுடன் தாரகனைக் கொன்று, பல க்ஷேத்திரங்களைக்கண்டு திருச்செந்தூரையடைந்து சூரபன்மனிடம் தூதாகவீரவாகுதேவரை விடுத்துத் தேவர் சிறையை விடுமாறு கூற, அவன் மறுப்பப்போர்புரிந்து அவன் புதல்வரையும் சிங்கமுகனையுஞ்சூரபன்மாவையும சங்கரித்தனர்.

இவர்களில் தாரகன்யானைத்தலையுடனிருந்தவன். சிங்கன் ஆயிரஞ் சிங்கத் தலைகளுடையவன். இவன் மகாஞ்ஞானி. தமயனுக்குப் பலவாறு மதிகூறியுங் கேளாமையின் அவன் பிரியப்படி போர் செய்திறந்தனன். சூரபன்மன் மகாமாயாவி. பலபலவடிவுகொண்டு போர் புரிந்து இறுதியில் மாமரமாக நின்று அதனைப்பிளந்தபோது ஒரு கூறு மயிலாகவும் ஒருகூறு சேவலாகவும் போருக்குவர, குமாரக்கடவுள் மயிலையூர்ந்து சேவலைக் கொடியாகக் கையலேற்றனர். அசுரனா யிருந்த போதும் பலராலுந் துதிசெய்யப் பட்டபடியே மயிலுஞ் சேவலுமாகி யிப்பொழுதும் பலராலுந் துதிக்கப் படும் பாக்கியம் பெற்றனன்.

சூரன்—(1) கார்த்த வீரியார்ச்சுனன் ஐந்தாம்புத்திரன். (2) இப்பெயர் கொண்ட யதுமரபினர் சிலர். (3) தேவமீடன் மகன். இவன் மகன் வசுதேவன். (4) விரோதன் மகன். இவன்மகன் சினி. (5) வசுதேவனுக்கும் மதிரைக்கும் பிறந்த புதல்வன்.

சூரி—ஒருபட்டப்பெயர். இது ஜைன நூலாசிரியர் கொள்வது.

சூரியகுண்டம்—ஒருதடாகம். காவிரி சங்கமுகத்துக் கருகிலுள்ளது.

சூரியகேது — இராவணன படைத் தலைவரிலொருவன்.

சூரியசாவர்ணி—சூரியனுக்குச் சாயாதேவியிடத் துதித்த எட்டாம்மநு. இவருடைய மநுவந்தரம் இனிவரவேண்டியது இவர் காலத்தில், பாதலத்தில் தவஞ்செய்யும் பலி இந்திரனுவன்.

சூரியபுரம்— அரிகுலத்தரசர் நகரம் [சூளா]

சூரியப்பிரபை—சுக்கிரன்மகள். இக்ஷ்வாகு வமிசத்துதித்த ஒருவன் அவளைக்காமுற்றுப் பலாத்காரமாகப்

பிடித்திழுக்க, அதனை யறிந்த சுக்கிரன் அவனுடன் எட்டுநாள்பெரும்போர்செய்து அவனை நகரசதோடு சுட்டெரித்தனன். [சைவபு]

சூரியன்—இவ்வண்டத்திற்கு ஆதாரமாகவும் தனக்குத் துருவனையாதாரமாகவுநிற்பவன். நவக்கிரகங்களிலொரு கிரகநிலையுடையவன். காசிபர்க்கும் அதிதிக்கும் பிறந்தவன். மனைவியர் துவஷ்டாவின் மகள் சஞ்ஞிகை சாயையென்போர். சஞ்ஞிகையிடம் வைவசுவதமநு இயமன் இவ்விருபுதல்வரும், யமுனையெனும் பெண்ணும் பிறந்தனர், சாயாதேவியிடம் சாவர்ணிமநு சனியிவர்களும பத்திரியெனும் பெண்ணும் பிறந்தனர்.

உதயகாலத்தில் பிரம சொரூபமாகவும், மத்தியானகாலத்தில் சிவசொரூபமாகவும், அஸ்தமயகாலத்தில் விஷ்ணு சொரூப மாகவும் தியானிக்கப்படுபவன். சூரியன் தேர் ஒற்றையாழியையும், சப்தா (எழு) குதிரையையுமுடையது.

சூரியாரண்ணியன்—இக்ஷுவாகு மரபினன். திரிதன்வன் மகன். திரயாரணியனென்றும் பெயருடையான். இவன் மகன் சத்தியவிரதனெனுந் திரிசங்கு.

சூர்ப்பகன்—மன்மதனாற் கொல்லப்பட்ட ஒரிராக்கதன்.

சூர்ப்பணகை—அரக்கி - இராவணன் தங்கை, வித்யுஜ்ஜிஹ்வன் மனைவி. ஜம்புகுமாரன் தாய். இவள் தசரதராமனைத் தண்டகாரணியத்திற் கண்டு காமுற்றுத் தன் கருத்தை வெளியிட, இராமன் தடுத்துத் தன் தம்பி இலக்ஷ்மணனிடத் தனுப்ப, இலக்ஷ்மணன் அவள் முறை திறம்புதலையும் சீதையைக்கவர முயற்சி செய்ததையுங்கண்டு நாசி முதலியவற்றை யறுத்துவிடுப்ப, கரதூஷணாதியரைப் போருக்கனுப்பி மாளச்செய்து, தன் தமயன் இராவணனிடம் சீதையை வர்ணித்து அவளைக் கொண்டுபோம்படி செய்து தனபந்து புத்திர மித்திராதிகளுடன் அழியக்காரணமாயிருந்தவள். சூர்ப்பம் = முறம்போல, நகை = பல்லை யுடையாளென்பது பதப்பொருள்.

சூலடங்கேசர்—பிரயாகையி னெதிரே திருக்கோயில் கொண்டெழுந்தருளியுள்ள சிவமூர்த்தி. [காசிக]

சூலினி—(1) உமாதேவி (2) துர்க்கை.

சூளாமணி—சிறுகாப்பியம் ஐந்தனுளொன்று. தோலாமொழித் தேவரால் 2131 செய்யுள்களாகச் செய்யப்பட்ட ஒருசைனநூல். இதுதிவிட்டனைக் கதாநாயகனாகவுடையது.

சூளி—ஒரிருடி - பிரமதத்தன் பிதா.

## செ

செகராசசேகரன் — ஈழநாட் டரசரிலொருவன். இவன் தமிழைவளர்த்தவனும். தன்பெயரால் செகராசசேகரமென சோதிடநூலொன்று செய்தனன்.

செங்காட்டங்குடி— சிறுத்தொண்ட நாயனார் ஜனனக்ஷேத்திரம்.

செங்குட்டுவன்—சேரன்செங்குட்டுவனென்றுஞ் சொல்லப்படுவன். சேரலாதன் புத்திரன். இளங்கோவடிகளுக்குத் தமையன். கண்ணகி தன் னுட்டையடைந்து தன் கணவனுடன் சுவர்க்கம் புக்கமையின்,

இமயமலைச் சிலையால் அவள் வடிவஞ்செய்து பிரதிஷ்டித்துப்பூசையும் விழவும் நடப்பித்தவன். கூலவாணிகன் சாத்தனாரிடத்து மிக்க நண்பினன்.

செங்குன்று—ஒருமலை. கொடுங்கோளூருக்கருகி லுள்ளது. இளங்கோவடிகள் இதனை முருகக் கடவுள் ஸ்தலங்களி லொன்றெனக் கூறியுளர். [சிலப்]

செங்குன்றூர்க்கிழார்—கடைச்சங்கப் புலவரி லொருவர். திருவள்ளுவமாலைபாடியவரி லொருவர். தமிழாசிரியரெனுஞ் சிறப்புப் பெயரும் இவர்க்கு வழங்கும்.

செங்கோடு—திருச்செங்கோடு. முருகக்கடவுளிருக்கையி லொன்று.

செந்தில் } திருச் செந்தூர். பாண்டி
செந்தூர் } நாட்டி லுள்ளது. குமாரசுவாமியின் ஆறுபடை வீடுகளி லொன்று. சூரபன்மனுடன் போர்புரிந்து திரும்பிய வுடன் தங்கிய க்ஷேத்திரம். குமரகுருபர சுவாமிகள் ஊமைத்தன்மை நீங்கியவிடம்.

செம்பூட்சேய்— அகத்திய முனிவர் மாணவர் பன்னிருவரி லொருவர்.

செம்மேனிநாயகர்—திருக்கா னூரில் சிவபிரானுக்கு வழங்குந்திருநாமம்.

செயலூர்க்கொடுஞ்செங்கண்ணனார்--கடைச்சங்கப் புலவரி லொருவர். இவர் செய்யுளும் திருவள்ளுவ மாலையிலுளது.

செயிர்க்காவிரியார்மகனார்சாத்தனார்--திருவள்ளுவமாலை சொல்லியகடைச்சங்கப் புலவரிலொருவர்.

செயிற்றியம்—ஒருநாடகத்தமிழ்நூல் இது செயிற்றியனாராற் செய்யப்பட்டது. அடியார்க்கு நல்லார் காலத்தி லேயே சில சூத்திரங்க ளிருந்தன.

செயிற்றியனார்—ஒரு நாடகத் தமிழ் நூலாசிரியர். இவர் செய்தது செயிற்றியமெனப்படும்.

செருத்தணி } நாடோறும் நீலோத்
திருத்தணிகை } பல மலர் மலரும் அற்புததீர்த்தமெனும் சுனையொன்றையுடையமலை. இது குமாரக்கடவுள் போர்புரிந்த கோபந்தணிந்த விடமாகலின் இப் பெயரேற்றதென்பர். இதுதொண்டைநாட்டுச் சுப்பிரமணிய ஸ்தலங்களிற் சிறந்ததொன்று.

செருத்துணைநாயனார்—அறுபான்மும்மைநாயன்மாரிலொருவர். தஞ்சையில் வேளாண் குலத் துதித்தவர். திருவாரூரில் சிவ பிரானுக்குத் தொண்டுசெய்துவருகையில், ஆங்குற்ற கழற்சிங்க நாயனார் மனைவி மண்டபத்தருகே வீழ்ந்து கிடந்த மலரொன்றை மோந்தமையின் அவர்மூக்கை யறுத்துவிட்டவர்.

செல்வக்கடுங்கோவாழியாதன—ஒரு சேரன். எட்டுத்தொகையு ளொன்றான பதிற்றுப்பத்தில், கபிலர்ஏழாம்பத்தினைப்பாட நூறாயிரம்பொற் காசும், நன்றாவென்னு மலைமீதேறிக் கண்டநாடும் பரிசளித்தவன். இது பதிற்றுப்பத்தில் 85-ம் செய்யுளில் உணரப்படும். இவன் இருபத்தைத் தாண்டு வீற்றிருந்தவன்.

செவ்வந்திப் புராணம் - திரிசிராமலை மான்மியம்.

செள்ளை—பூர்வம் பெண்பாலார்க்குவழங்கிய பெயர். இதனை, காக்கைபாடினியார்நச்செள்ளையாரிற்காண்க.

செவ்வாய்—நவக் கிரகங்களில் ஒரு

கிரகநிலை யுடையவன். சிவந்த மேனியன். அக்கிறம் வேறுபடின் பூமியிற் கலகம் நோய் முதலிய உற்பாதங்களுண்டாகுமாம்.

செனனவசவேசர் — சங்கமர் பரிகலத்தி விச்சை நீங்காத வீரசைவர். இருவினைப்பற்றற்றவர். வசவதேவரிடத்துப் பெரும்பக்தி யுடையவர்.

சென்னிமலை—கொங்கு நாட்டிலுள்ளது. இது சுப்பிரமணியத் தலம். குன்றுதோறாடலி லொன்று.

## சே

சேக்கிழார்சுவாமிகள் —சைவத்திரு முறைகளில் பன்னிரண்டாவதாகிய திருத்தொண்டர் புராணமென்னும் பெரியபுராணத்தைத் தமிழில இயற்றியவர். இவர் தொண்டைநாட்டிலே புலியூர்க்கோட்டத்திலே குன்றத்தூரிலே வேளாண்மரபிலே சேக்கிழார் குடியிலே அருண்மொழிதேவரெனும் பெயரோடவதரித்தவர். சேக்கிழார் மரபை விளங்கச் செய்தவராகலின் அம்மரபின் பெயரே யிவர்க்குப்பெயராயது. இவர் இளமைப் பருவத்தே கல்வி யறிவொழுக்கங்களிற் சிறந்திடுந் தன்மையுணர்ந்த அநபாய சோழனால் மந்திரியாகக் கொள்ளப் பட்டவர். அரசன் சீவக சிந்தாமணி யாகிய சைனகாப்பியத்தை யன்பு பாராட்டி நாடோறுங் கேட்டு வருதலையுணர்ந்து, இது அவகதை. இம்மை மறுமைப்பயனைத் தரவல்ல சிவகதையைக் கேட்கவேண்டு மெனக் கூற, அரசன் அங்ஙனமாயின் அதனைப்பலர்க்கும் பயன்படுத்து மாறு நூலாக்கித் தருகவெனக் கேட்க, அவன்பால் விடைகொண்டு சிதம்பரத்தை யடைந்து நடராசபதியைப்பணிந்து துதிப்ப, "உலகெலாம்" என்றெழுந்த அசரீரியையே முதன்மொழியாகக் கொண்டு, இரண்டு காண்டங்கள் பதின்மூன்று சருக்கங்களாகப் பெரியபுராண மியற்றினர். இவர் ஆளுடைய நம்பிகளாகிய சுந்தரமூர்த்திசுவாமிகள் அருளிச்செய்த திருத்தொண்டத்தொகையை முதனூலாகவும், அதன் பொருளை நம்பியாண்டார் நம்பிக்குத் திருநாரையூரி லெழுந்தருளிய பொல்லாப் பிள்ளையார் விளக்க, அவற்றைக் கொண்டு அந்நம்பியாண்டார் அருளிச்செய்த கவித்துறையந்தாதியை வழிநூலாகவுங் கொண்டு திருவருளாலியற்றி அரசனுக்கறிவிப்ப, அவன் திருச்சிற்றம்பலத்தை யடைந்து பெரிய புராணத்தைச் சேக்கிழார்சுவாமிகள் பிரசங்கஞ்செய்ய ஒரு வருடத்திற்கேட்டு முடித்து, புராண சிரவணத்திற்காக ஆண்டுற்ற அரனடியர்க்கும் மற்றையோர்க்கும் காலந்தோறும் அன்ன முதலியன குறைவற நடத்தி, அநேக வகைச் சிறப்புடன் யானையின் மீது சேக்கிழாரையும் புராணத்தையும் எழுந்தருளச்செய்து தானே சாமரம்வீசித் திருவீதிவலஞ் செய்வித்துச் சாஷ்டாங்க தண்டஞ்செய்து, இனி தேவரீர் திருவுள்ளத்தின் படி யிருந்தருளலாமென விடைகொடுத்துத் தொண்டர்சீர் பரவுவாரெனத் திருநாமஞ்சூட்டி விடுத்து, இவருக்கிளைய பாலறுவாயர் திருநாகேச்சுரத்திலிருப்பதுணர்ந்து அவரைத்தரு

வித்து மந்திரியாகக் கொண்டனன். சுவாமிகள் தில்லையில் சிலகாலம் வசித்திருந்து சிவபெருமான் திருவடிநீழலை யடைந்தனர்.

சேடக்குடும்பியன்—திரு அநந்தபுரத்திருந்த ஓரந்தணன். தன்பால் அடைக்கலம்புக்க கண்ணகிக்குநிகழ்ந்த துன்பங்களை யறிந்து தீயில் விழுந்திறந்த மாதரியை மறுபிறப்பில் புத்திரியாகப் பெற்றவன்.[ற,

சேடி—வித்தியாதரநகரங்களிலொன்

சேட்டலூராழ்வான்—வைணவ ,சிங்காசனாதிபதிகள் எழுபதது நால்வரிலொருவர்.

சேதன்—துருஹியன் பௌத்திரன்.

சேதி—(1) ஒருநாடு (2) யதுமரபினனாகிய உதிகன் புத்திரன். இவன் வமிசமே சேதிவமிசம்.

சேதிராயர்—திருவிசைப்பா வெனும் ஒன்பதாந் திருமுறையியற்றியஒன்பது நாயன்மாரிலொருவர்.

சேது—இராவண சங்காரஞ் செய்தமையால் தனக்குற்ற பிரமஹத்தி நீங்கும்படி தசரதராமனால்சிவலிங்கப் பிரதிட்டை செய்து நீராடியவிடம். இது மகா புண்ணிய தீர்த்தம். எண்ணிலார் நாடோறும்அங்குச்சென்று மூழ்குவாராயுளர்.

சேதுபந்தனம்— இராமனும் வானரசேனைகளும் பாண்டிநாட்டி லிருந்து இலங்கைக்குச்செல்லவேண்டி வானரசேனைகள் கடலைத் தூர்த்த அணை இதைஆங்கிலேயர்[ஆடம்ஸ் பிரிட்ஜ்] ஆதமெனும்ஆதிமனிதன் கட்டிய அணையென்பர்.

சேதுபுராணம்— திரு இராமேச்சரஸ்தலமான்மியத்தையும் சேதுதீர்த்த மகிமையையும் விளக்கத்தக்க ஒருபுராணம். இது நிரம்பவழகிய தேசிகராற்செய்யப்பட்டது. நயம் கற்பனை பொருட்பொலிவு முதலியவற்றிற் சிறந்தது.

சேந்தனார்—(1) ஒருசிற்றரசர். இவரே திவாகர நிகண்டு செய்வித்த பிரபு.(2)திருவெண்காட்டடிகளெனும் பட்டினத்துப்பிள்ளையாருக்கு மந்திரியும் கணிகருமா யிருந்தவர். திருவெண்காட்டடிகள் துறவுபூண்டபிறகு அரசன இவரைச்சிறையிலிட்டு விலங்கிட்டு அந்நியைய யெல்லாங்கவர, இவர் குமாரரால்இவற்றை யறிந்த திருவெண் காடர் "மத்தளை தயிருண்டானு மலர்மிசை மன்னினானு, நித்தலுந்தேடிக்காணா நிமலனே யமலமூர்த்தி, செய்த்தலை கயல்பாய் நாங்கூர்ச் சேந்தனை வேந்தனிட்ட, கைத்தளைநீக்கி யென்முன் காட்டுவெண் காட்டுளானே" எனக்கூற, அங்ஙனமே தளைநீக்கி, திருவெண்காட்டடிகள்முன்கொண்டுவந்து விடப்பெற்றவர்.திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் பாடியவர்.

பட்டினத் தடிகளிடத் திருந்தவர்வேறு திருவிசைப்பா வோதியவர் வேறாகஇருவரென்பது ஒருசாரார் கொள்கை.

அஃதெங்ஙனமாயினு மாகுக. இவர் நாடோறுங் காடுசென்றுவிறகினைக்கொணர்ந்து விற்று, அதனால் வரும் ஊதியத்தைக்கொண்டு சிவனடியார்க்கு அமுது செய்வித்துண்ணும் நியதியுடையராய்ச் சிதம்பரத்தில் வசித்திருக்கையில், ஒருநாள் விறகு கிடைக்காமலும் கிடைத்த விறகு விலைபோகாமலும், ஆகார

யின்றிப் புற்கையினாலாகிய உணவை வைத்துக்கொண்டு சிவனடியாரைத்தேட, சிவபிரானேயடியாராக வந்து அதனையேற்று அவரை மகிழ்வித்து முத்திகொடுக்கப் பெற்றவர். இக்களி யுணவு நகரெங்கும் பெருகிக்கிடந்து பலர்க்கு முணவதாகியது. அத்தினம் திருவாதிரையாகலின், அன்றுமுதல் திருவாதிரையிற் களிநிவேதனஞ் செய்யும் வழக்குண்டாயது.

**சேரமான் கடலோட்டிய வேல்கெழுகுட்டுவன்** — ஒருசேரன். போர் வன்மையின் மிக்கவனாகலின், அவன் யானைச் சேனை மேகமென்றும், போர்வீரர் கையிலுள்ள வாட்படை மின்னலென்றும், போர்ப்பேரிகை மேகமுழக்கென்றும், குதிரைகளின்கதி காற்றென்றும், பாணங்களை மழைத்தாரையென்றும், பூமிவயலென்றும், தேர்களை ஏரென்றும், படை படைச்சாலென்றும், எறிவேல் விதையென்றும் கூறி, வேளாண்மை புரிவோனெனப்பரணர் இவன் போர்த்திறத்தை வாணித்துப்புகழ்ந்து புறநானூற்றில் 13-ம் செய்யுளிற் கூறியுள்ளார்.

**சேரமான்கடுங்கோவாழியாதன்** — கபிலர் தன்னைப் பதிற்றுப்பத்தில் ஏழாம்பத்திற் பாடியதற்காக நூறாயிரம் பொற்காசும் மலைமீதேறிக் கண்டநாடும் பரிசளித்தவன். ஆண்மைமிக்கவன். இவன் சிக்கற்பள்ளியிற் றுஞ்சியவன். குண்டுகட் பாலியாதனாராலும் பாடப்பெற்றவன்.

**சேரமான் கணைக்காலிரும்பொறை** — இவன் சோழன் செங்கணானுடன் போர்புரிந்து அவனாற் பிடிக்கப்பட்டு, குடவாயிற் கோட்டத்துச் சிறையிற் கிடந்து 'தண்ணீர்' என்று கேட்டு, உடனே பெறாது பின்னர்ப் பெற்றமையின் மானத்தால் அதனைப் பருகாது வைத்துக்கொண்டிருந்து "குழவியிறப்பினு மூன்றடிபிறப்பினும், ஆளன்றென்று வாளிற் றப்பார், தொடர்ப்படு ஞமலியி னிடர்ப்படுத் திரீஇய, கேளல் கேளிர் வேளாண் சிறுபதம், மதுகையின்றி வயிற்றுத்தீத் தணியத், தாமிரந் துண்ணு மளவை, யீன்மரோவிவ் வுலகத் தானே" எனும் பாடலைப்பாடித் தன்கருத்தைப் புலப்படுத்தித் துஞ்சியவன்.

**சேரமான் கருவூரேறியவொள்வாட்கோப்பெருஞ்சேரலிரும்பொறை** — நரிவெரூஉத்தலையரெனும் புலவர் இவனைக் கண்டவுடன் நல்லுடம்பு பெற்றமையின் அவராற்பாடப்பட்டவன் [புறநா]

**சேரமான்குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை** — பதிற்றுப்பத்தில் ஒன்பதாம்பத்திற்குத் தலைவன். பெருங்குன்றூர்கிழாராற் பாடப் பட்டவன். சேரமான் குடக்கோச் சேரலிரும்பொறை யென்றும் பெயருடையான்.

**சேரமான்குடக்கோநெடுஞ்சேரலாதன்** — இவனும் வேற்பஃறடக்கைப் பெருநற்கிள்ளியெனுஞ் சோழனும் போரிலிறந்தபொழுது கழாத்தலையார் பரணர் இவர்களாற் சோழனொடு கூட்டிப் பாடப்பெற்றவன். [புறநா]

**சேரமான்குட்டுவன்கோதை** — கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனாராற் பாடப் பட்டவன்.

கொடையாளி. [குட்டுவன்=(மலைநாட்டின ஒருபகுதியாக) குடநாட்டரசன்.]

சேரமான்கோக்கோதைமார்பன்—சேரன் கோச்செங்கட் சோழனகாலத்தவன். இவன நகரம் தொண்டியெனப்படும். இவன் பொய்கையாரால் பாடப்பட்டவன். வண்மையாளன் [புறநா]

சேரமானகோட்டம்பலத்துத்துஞ்சியமாக்கோதை—புலமை நிறைந்த சேரரிலொருவன. தன்மனைவியிறந்தபொழுது "யாங்குப்பெரிதாயினும்" எனும்பாடலைப் பிரிவாற்றாது பாடியவன். [புறநா]

சேரமான்சிக்கற்பள்ளிததுஞ்சியசெல்வக்கடுங்கோவாழியாதன— இவன ஒருசிறந்த கொடையாளி. இவனைப்பாடிய புலவன் குண்டுகட் பாலியாதன். [புறநா]

சேரமான் செல்வக்கடுங்கோவாழியாதன்—கபிலர் கையைப்பற்றி நுங்கைமெல்லியவென் அவராற்பாடப்பட்டவன். [புறநா]

சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரவிரும்பொறை — தன் கட்டிலில் துயின்ற மோசிகீரனாரைத் துயிலெழுப்பாதும் தண்டியாதும்அவர் விழிக்குமெல்லையும் விசிறி நின்றதயாளன். இது அம்மோசிகீரனார் புறநானூற்றில் கூறிய பாட்டானுணரத்தகும. பதிற்றுப்பத்தில் எட்டாம்பத்தினுக்குத் தலைவன். அதனைப்பாடிய அரிசில்கிழார்க்குஒன்பதிலக்ஷம்பொன் பரிசிலாகக் கொடுத்தவன். தகடூரை வென்றவன். தகடூர் யாத்திரையெனுநூல்இவன் காலத்திலேசெய்யப்பட்டது. [புற]

சேரமான்பாமுளூரெறிந்தநெய் தலங்கானலிளஞ்சேட்சென்னி — ஒரு சோழன். சேரனது பாமுளூரை வென்று கைக்கொண்டவன். ஒருநாள் ஊனைவாங்கிக் குடையினுண் மறைத்துச் சென்று, ஊன்பொதிபசுங்குடையாரெனக் காரணப்பெயர்பெற்ற புலவராற் பாடப்பெற்றவன். [புறநா]

சேரமானபாலைபாடிய பெருங் கடுங்கோ---பாட்டுக்கொடைவென்றிமுதலியனமிக்குடையவன். பேய்மகள் இளவெயினியாற் பாடப் பெற்றவன். [புறநா]

சேரமானபெருஞ்சேரலாதன்—கரிகாற்சோழனுக்குப் புறங் கொடுத்து வடநாடுசென்று வசித்த சேரன். இவனைப்பாடினோர் கழாஅத்தலையார் வெண்ணிக்குயத்தியார். [புறநா]

சேரமான்பெருஞ்சோற்றுஉதியன் சேரலாதன்—பாரதயுத்தத்தில் பாண்டவ கௌரவசேனைகட்குணவளித்தவன். முரஞ்சியூர் முடிநாகராயராற் பாடப்பட்டவன். [புற] ஈண்டுக்கூறிய முடிநாகராயர் முதற்சங்கத்திருந்தவரன்று. புறநானூறு தலைச்சங்கப் புலவராற் பாடப்பட்டதன்றாகலின்.

சேரமான்பெருமாணாயனார்— கழறிற்றறிவார் நாயனாரிற்காண்க.

சேரமானபெருமாள்--மலைநாட்டுமன்னர்களி லொருவன். இவன் துருக்கரோடு யுத்தம்புரிந்து தோல்வியுற்றுத துருக்கமதத்தை யேற்றுஅவர்கள் தெய்வீக நகரமாகிய மக்கத்தையடைந்துஅங்கேயிறந்தவன்.

சேரமான் மாந்தரஞ்சேர விரும்பொறை—கோச்சேரமான் யானைக்கட்

செய்மாந்தரஞ்சேரலிரும்பொறையிற் காண்க.

சேரமான்மாவெண்கோ—கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதியும், இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியும் மிக்க நண்பராகவுடையவர். இவரே சேரமான்பெருமா ளுயனு ரெனப்படுவர். இவர் ஒளவையாரா ற்பாடப்பெற்றவர்.

சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை — கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறையிற் காண்க.

சேரமான்வஞ்சன்— எல்லை யில்லாத கொடையாளி. திருத்தாம னாரற் பாடப்பட்டவன்.

சேரலாதன் — செங்குட்டுவ னுக்கும் இளங்கோவடிகளுக்குந் தந்தை.

சேரவமிசாந்தகபாண்டியன் — சோழவமிசாந்தகபாண்டியன் மகன்.

சேரன்அந்துவஞ்சேரலிரும்பொறை- உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்நண்பன். சோழன்முடித்தலைக் கோப்பெருநற் கிள்ளியின் பகைவன் [புறநா]

சேரன்செங்குட்டுவன்—சிலப்பதிகாரமியற்றிய இளங்கோ வடிகள் தமயன். கண்ணகி தன் நாட்டில்வந்து கணவனுடன் சுவர்க்கம் புகுந்ததுணர்ந்து இமயமலையிலிருந்து சிலை கொணர்ந்து அவள் வடிவியற்றிப் பிரதிட்டித்துப் பூசையும் விழவும் நடத்தியவன்.

சேரன்செங்கோற்பொறையன்—சேரமான் மாவெண்கோ வெனப்படு கழறிற்றறிவார் நாயனாருக்கு முந்தியசேரன். இவனைப்புற்றி[illegible] யங்களைக் கோச்சேரமான் [illegible]கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையிற் காண்க.

சேரன்மாந்தரஞ் சேரலிரும்பொறை- கோச்சேரமான் யானைக்கட் சேய் மாந்தரஞ்சேர லிரும்பொறையிற் காண்க.

சேஷன்—ஆதிசேடன். திருமால் சயனமாயுள்ளவன். காசிபர்புத்திரன். ஆயிரம் பணாமுடிகளையுடையவன்.

சேனஜித்து-(1) இக்ஷ்வாகுமரபில் கிருதாசுவன்மகன். இவன் மகன் யுவநாசுவன். (2) பாஞ்சால நாட்டு விசுவஜித்துமகன். இவன் புத்திரர் ருசிராசுவன் திடஹனு காசியன் வற்சஹனு எனு நால்வர்.

சேனன்--கனகமாலை சகோதரர் பலருவன். [சீவக]

சேனாவரையர் — வடமொழி தென்மொழிகளில் வல்லவரான ஒருரையாசிரியர். தொல்காப்பியச் சொல்லதிகாரவுரை செய்தனர். அது சேனாவரையமென இவர் பெயரால் வழங்குகிறது. இவர் இளம்பூரணருரையை யிடை யிடையே மறுத்திருத்தலாலும், இவருரை நச்சினார்க்கினியரால் மறுக்கப்பட் டிருத்தலாலும், இவர் இளம்பூரணருக்குப் பிந்தியவரும், நச்சினார்க் கினியருக்கு முந்தியவருமாதல் வேண்டும். இவரைப் பாண்டிநாட் டந்தணரென்பது சிலர் கொள்கை.

## சை

சைசுநாகர்—சிசுநாகன் மரபினராய பதின்மர். பிரத்தியோதர்களுக்குப் பின் மகதநாட்டில் முந்நூற்றறுபத்திரண்டு வருடகாலம் அரசு செலுத்தினோர்.

சைதந்தியர்—இலிங்கதாரணஞ் செய்பவர்களைப்போல வருணாசிரமதருமங்களை நிராகரிப்பவர்கள்.

சைத்தியர்—யாதவரி லொரு சாரார். சேதிவழியில் வந்தவராதலின் இப்பெயர் பெற்றவர். சேதியென்பான் விதரியன் புத்திரனாயரோமபாதன் வழித்தோன்றல்.

சைத்திரரதம்-குபேரன் நந்தனவனம்

சைந்தவன்—சிந்து தேசத் தரசன். விருத்த க்ஷத்திரன் மகன். துர்யோதனன் தங்கை கணவன். இவன் பாண்டவர் வனவாசத்தில் திரௌபதியைக் கவர்ந்துசெல்ல, பாண்டவர்கள் அவளை மீட்டுக் கொண்டு இவனை யவமதித்தார்கள். பாரதயுத்தத்தில் அர்ச்சுனனாலிறந்தவன்.

சைப்பியர் — உசீநரனபுத்திரனாகிய சிபி மரபினர்.

சைப்பியை—(1) விதேகராசன்மகள். இவள் மகாபதிவிரதை. தன் கணவனை சததனுவெனு மரசன் கங்காஸ்நானஞ்செய்து வீட்டிற்குத் திரும்புகையில், பதிதனான ஒருகொடியோனோடு சம்பாஷித்தபாவத்தால் நாயாகவும் காகங் கொக்கு மயில்களாகவும் பிறந்து மீண்டும்மானுஷஜனனமடைய வேண்டி வந்தமையும், இவை ஜன்மாந்தர பாவ வாசனையெனபதையும் தெரிந்து கொண்டு அதுவரையில் விவாகமின்றியிருந்து அவன் மானுஷனாக வந்த பிறகு மணஞ்செய்தவள். (2) சியாமகன் மனைவி. விதர்ப்பன் மாதா

சைமினி—(1) அளவை வாதநூலாசிரியர்களி லொருவராகிய முனிவர். பிரத்தியக்ஷ முதலிய பிரமாணங்கள் பத்தனுள் இவர்கொண்ட பிரமாணம் ஆறேயாம். (2) பாரதஞ் சொல்லிய ஒருமுனிவர். இவரியற்றியது சைமினிபாரதமெனப்படும்.

சையகிரி—கொங்குநாட்டின் கீழ்ப்பாலுள்ள தொருமலை. இதுவே காவிரியின் உற்பத்திஸ்தானம்.

சைவகுரவர்—திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருநாவுக்கரசு சுவாமிகள் சுந்தரமூர்த்தி சுவாமிகள் மாணிக்கவாசக சுவாமிகள் எனப்படு நால்வர். இவர்கள் ஒரோ காலங்களில் சாலவேறு பாட்டாற் சைவங்குன்றுமாப்போலிருந்ததால் சிவாக்கினையால் அவதரித்து அவற்றை யிலக்கிச் சைவப் பயிரை ஓங்குமாறு செய்தவர்கள்.

சைவம்—(1) ஒருபுராணம். சுவேதவராககற்பத்து நிகழ்ந்த சிவமகாத்மியங்களை விளக்குவது. அது இருபத்து நான் காயிரங் கிரந்தங்களையுடையது. இலக்ஷகிரந்த முடையதென அந் நூலிற் கூறப்பட்டிருத்தலின் எஞ்சியவையிறந்தனபோலும் (2) சிவபெருமானை வழிபடும் ஒரு சமயம்.

சைவாகமம்—ஆகமங்களிற் காண்க.

சைலவை—அநிலன எனும் வாயுவின் மனைவி.

## சொ

சொக்கநாயகர்—மதுரையில் சிவபெருமானுக்கு வழங்குந்திருநாமம்.

சொட்டையம்மாள்—வைணவசிங்காசனாதிபதிகள் எழுபத்து நால்வரி லொருவர்.

சொரூபானந்தசித்தியார்—ஒரு ஞானநூல். இதில் பிரமஞானியர்கால அளவுமுதலியன விளக்கப்பட்டன.

சொரூபானந்தர்—திருவாரூர் சிவப்பிரகாசர்மாணவர். தத்துவராயர்க்காசிரியர்.

சொர்ணபுரீசர்-(1)திருச்செம்பொன்பள்ளி (2) திருப்புத்தூர் - இத்தலங்களில் சிவபெருமானுக்குவழங்குந் திருநாமம்.

சொன்னரதன் — இரத்தினபுர ராசகுமாரன் [சூளா]

## சோ

சோங்கிசாந்தகபாண்டியன்—மதுரையிலரசுபுரிந்த ஐம்பத்திரண்டாம் பாண்டியன்.

சோணகிரி—திருவண்ணாமலை.

சோணபுரம்—வாணாசுரன் நகரம்.

சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன்—வேதியர் அறுதொழிலையுஞ் சிரத்தையுடன் செய்த அந்தணன். கொடையாளி. இவனைப் பாடியவர் ஆவூர் மூலங்கிழார்.

சோணாட்டு முகையலூர்ச் சிறுகருந்தும்பியார்—வல்லார்கிழான் பண்ணனைப்பாடிய ஒருபுலவர். இவர் பாடிய பாடல்கள் எட்டுத்தொகையுட்சிலவுள.

சோணிதபுரி—சோணபுரம்.

சோணை—(1) ஒருநதி. மைநாககிரியிலுதித்துக் கங்கையிற் கலப்பது.(2) இப்பெயர்கொண்ட மற்றொருநதி சித்தாச் சிரமத்திற்கும் மிதிலைக்கும் இடையேயுள்ளது. இது மகததேயத்திற்பாய்தலால் மாகதியென்றும் பெயர்பெறும். சோணபத்திர விநாயகமூர்த்தங்க ளெடுக்குமிடம். (3) சேரலாதன் மனைவி.

சோதி—ஒரு வசுவின்மகன்.

சோதிமாலை—(1)திவிட்டன் புதல்வி (2) மேகவாகனன் புத்திரி. அருக்ககீர்த்தியின் மனைவி.

சோதிமான்—ஓரரசன். மகவின்றிப் பெருந்தவஞ்செய்து பெண்மகவு பெற்று, அது தோன்றிய நாள் பெருந்தீமைகட் கேதுவாயிருக்குமெனச் சோதிடராலறிந்து ஒரு பெட்டியிலடக்கி ஆற்றிலிட, அப்பேழை மயன்கையிலகப்பட அவன் திறந்துபெண்ணைப்பார்த்து "தீர்க்கசுமங்கலிபவ" என் றாசீர்வதிக்க, அப்பெண் "சுவாமி! அடியேனுக்கு விவாகமில்லை. நானிருப்பது தேசத்திற்கு அரிஷ்டமென ஆற்றிலிட்டனர்" என, மயன் ஆனால் "என் தவமகிமையால் மாங்கலிய சூத்திரத்துடன் சந்திரமதி யென்று ஜனிப்பாய்" என்றனுக்கிரகிக்க, உடனே அப்பெண் தீப்பாய்ந்திறந்து மதிதயனுக்கு மகளாய்த் தோன்றின ளென்பது புராண சம்மதம்.

சோநகரம் — வாணாசுரன் பிரதான பட்டணம்.

சோபிதர்—புத்தர்களில் ஒன்பதாவதாகத் தோன்றியவர்.

சோமகன்—(1) பிரமன் நித்திரையிலிருக்கையில் வேதங்களைத் திரட்டிக்கொண்டு கடலில் ஒளித்த அசுரன். திருமால் மச்சாவதாரமெடுத்து அவ்வேதத்தைக் கைப்பற்றிக்கொண்டு சங்கரிக்க இறந்தவன் (2) பாஞ்சாலநாட்டுச் சகதேவன் மகன். இவன் மகன் சுஜன்மகிருது. இவன் பேரன் விருஷதன். (3) ஒரிராஜருஷி. ஜந்தன்தந்தை. (4) சிவகணத்தலைவன் - உதிரப்பலிக்கு[illegible]

ரவர் சென்றபொழுது அவரோடி ருந்த பரிசனரிலொருவன்.

சோமகாந்தன் — ஓரரசன். இவன்ம கன் ஹேமகண்டன்.

சோமகுண்டம் — (1) ஒருதடாகம். காவிரியின் சங்கமுகத்துக் கருகி லுள்ளது.(2)திருவெண்காட்டு மூக் குளங்களிலொன்று.

சோமசமஸ்தங்கள் — அக்நிஷ்டோ மம் அத்யக்நிஷ்டோமம் உக்தியம் ஷோடசி அதிராத்ரம் அப்தோர்யா மம் வாஜபேய மெனப்படியாக பேதங்கள். இவை சிரௌதாக்கி யிற் செய்யப்படுவன.

சோமசிரவசு — சுருதசிரவன் மகன். ஜனமேஜயன் புரோகிதன்.

சோமசிரவம்—ஒரு புண்ணியதீர்த் தம்.பாஞ்சாலத்திற் கருகிலுள்ளது. இதன் கரையிலே அர்ச்சுனனுடன் போர்செய்த அங்காரவர்ணன் சாப வுடல் நீங்கிப் பண்டைய உடல் பெற்றுச் சித்திரரதனாகித் தன்னு லகடைய சேர்ந்தது.

சோமசுந்தரபாண்டியர்— சிவபிரான். திருக்கைலாய கிரியினின்றெழுந்த ருளித் தடாதகைப் பிராட்டியாரை மணம்புரிந்து பாண்டியராக அரசு வீற்றிருந்தவர். மலயத்துவஜபாண் டியன் மருகர். மதுரையையாண்ட மூன்றும்பாண்டியர்.

சோமசுந்தரபாதசேகரபாண்டியன்— வங்கியபாத பாண்டியனுக்குப் பின் மதுரையைஅரசுபுரிந்தவன்.சோழ னை மடுவில் வீழ்த்திய அருள்பெற் றவன்.

சோமசூடாமணிபாண்டியன்— வம்ச பூஷணபாண்டியனுக்குப்பின் மது ரையை யாண்டவன்.

சோமதத்தன்—சந்தனு சகோதரனு கிய பாஹ்லிகன்மகன். பாரதப்போ ரிலிறந்தவன். இவன் புத்திரர் பூரி பூரிசிரவன் சலன் என்னு மூவர்.

சோமதீர்த்தம்—சோம நாதபுரத்தரு கிலுள்ள பிரபாசதீர்த்தம். சந்திரன் தனக்குற்ற க்ஷயரோகத்தை இத்தீர் த்தத்திலாடி நீக்கினமையின் இப் பெயரேற்றது.

சோமநந்தி—உமாதேவி கௌரநிறம டையத் தவத்திருக்கையில்,அங்குக் காவல் செய்திருந்தபுலி. அதனைய ருளும்படி உமாதேவியார் சிவபிரா னிடம் வேண்ட கஞ்சுகம் பொற் பிரம்பு வாள் இவைதந்து திருநந்தி தேவருக் கடங்கிக் காவல்செய்யக் கட்டளையிட் டருளினர். அதுவே சோமநந்தியென்று சைவபுராணங் கூறும்.

சோமநாதம்—கூர்ச்சரநாட்டில் சந்தி ரன் தவஞ்செய்த சிவக்ஷேத்திரம்.

சோமநாதர்—ஒரு வீரசைவர். பிரம சூத்திரத்திற்குத் தம்மதச்சார்பாகப் பாஷியஞ் செய்தவர்.

சோமநாதீயம்—சோமநாதர் செய்த பிரமசூத்திரபாஷியம். இது வீர சைவம்.

சோமன்—(1) சிவன் (2) க்ஷீராப்தி மதனத்திலுதித்தவன். (3) அத்திரி முனிவர்க்கு அநசூயையிடம் பிறந் தவன். இச்சந்திரனே பிருகற்பதி முனிவரிடம் கல்விபயின்று அவர் மனைவி தாரையைப்புணர்ந்து பிரு கற்பதியால்க்ஷயரோகமுறச்சபிக்கப் பெற்றவன் [சந்திரசேகர மூர்த்தி யிற்காண்க] (4) வசுக்களிலொரு வன். பிரஜாபதிமகன். மனோஹரை கணவன். புரோஜபன் வர்ச்சஸ்

பிராணன் சுரணன் ரமணன் இவ்வைவர்க்கும் பிரஜையென்பாளுக்கும் பிதா. இப்பிரஜை கந்தர்வர் பதின்மர்க்குப் பொதுமனைவியானவள். (5) யமன் (6) குபேரன்.

சோமாசிமாறநாயனர்--அறுபான் மும்மைநாயன்மாரு ளொருவர். அந்தணர்குலத்தி லவதரித்தவர். அடியவர்கட்குத் தொண்டுபூண்டொழுகு நிலையே கடனாகக் கொண்டவர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஏவலின் வழி நின்று முத்தியடைந்தவர்.

சோமாசியாண்டான்—வைணவ சிங்காசனாதிபதிகள் எழுபத்துநால்வரி லொருவர்.

சோமாபி—சராசந்தன்மகன். சகதேவனுக்குப் பிறந்தவன். சோமகனென்றுஞ் சொல்லப்படுவன்.

சோமாஸ்கந்தர் } ஸ + உமா + ஸ்கந்
ஸோமாஸ்கந்தர் } தா. சிவபெருமான் உமாதேவியார இவர்க்கிடையே ஸ்கந்தர் எழுந்தருளியிருப்பதொரு மூர்த்தம். இம்மூர்த்தி உற்சவமுதலிய காரணங்களால் ஆலயத்திலில்லாதிருக்கையில், மூலலிங்க தரிசனம் பயனின்றென்பது சிவாகமத் துணிவு. இவரே இடபாரூட கஜாரூட இரதாரூட அசுவாரூடாதிகளில் எழுந்தருளுவர். இது சிவபெருமானும் தேவியும் ஸ்கந்தரைச் சரவணப்பொய்கையிற் றழுவியெடுத்த அவசரம். இது அஷ்டாஷ்ட மூர்த்தங்களிலும் பஞ்சவிம்சதி மூர்த்தங்களிலும் ஒன்று.

சோமி—ஒருதாசி. இவள் ஆற்றூரிலே ஜனித்தவள். கல்விப்புலமை வாய்ந்தவள். புலவர்கட்குப் பொன்மாரி பொழிந்தவள். காளமேகப் புலவராலும் பாடப்பெற்றவள்.

சோமேசர்—முதுகுளத்தூரிலும் சென்னைக்கடுத்த குளத்தூரிலும் சிவபிரானுக்கு வழங்குந்திருநாமம்.

சோமேசவெண்பா — குளத்தூரிலுள்ள சோமேசரை முன்னிலையாக்கித் திருவாவடுதுறைச் சிவஞானயோகிகளியற்றியது. இதுமுன்னிருவரிகளிற் றிருக்குற ளொன்றும் பின்னிருவரிகளில் அதற்கியைந்த சரிதை யொன்றும் அமையப் பெற்ற காரணததால் முதுமொழி வெண்பா வெனப்படும். இதுவே அரங்கேச வெண்பா சிவசிவவெண்பா முதலியவற்றிற்கு முதனூலாம்.

சோரன்—வில்கணனிற்காண்க. இவனொரு சம்ஸ்கிருத கவிவாணன்.

சோலைமலை—இது பழமுதிர் சோலையென்றுஞ் சொல்வப்படும். முருகக்கடவுளின் ஆறு படை வீடுகளிலொன்று. இது இக்காலத்து அழகர்மலை யெனும் பெயரால்விஷ்ணு ஸ்தலமாக வழங்குகின்றது.

சோழதேசம்—இது தமிழ்நாட்டு மூவேந்தரில் சோழர்கள் அரசு செலுத்தியதேசம். காவிரி வளஞ்செய்த வின்புனனாடெனவும்படும். "கடல் கிழக்குத் தெற்குக் கரைபொருவெள்ளாறு, குடதிசையிற்கோட்டைக் கரையாம்—வடதிசையில், ஏனாட்டுப் பெண்ணை யிருபத்து நாற்காதஞ், சோனாட்டுக் கெல்லையெனச் சொல்" எனும் வெண்பாவால் இதனெல்லையும் விஸ்திரணமு மறியத்தகும். "சோழவளநாடு சோறுடைத்து" என ஔவைப் பிராட்டியார் அமுதவாக்கால் புகழ்ந்தோதப் பெற்றது. கருவூர் திருவாரூர் காவிரிப்

பூம்பட்டினம் எனும் நகரங்கள் ஒவ்வொரு காலங்களில் இராஜதானியாக வுடைத்தாயிருந்தது. கணக்கில்லாத சிவாலயவிஷ்ணுவாலயங்களை யுடையது.

சோழநாட்டுப் பிடவூர்கிழான் மகன் பெருஞ்சாத்தன்—மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனாராற் பாடப் பட்டவன். நச்சினார்க்கினியராற் பொருளதிகார வுரையில் எடுத்தெழுதப்பட்டவன். வேளாண் பிரபு. முடியுடைமன்னர்க்கு மகட் கொடை நேர்தற்குரியான்.

சோழவமிசாந்தகபாண்டியன் — மதுரையில் அரிபுமர்த்தன பாண்டியனுக்குப் பின் அரசுசெய்த ஐம்பத்தோராம்பாண்டியன். இவன் மகன் சேர்வமிசாந்தக பாண்டியன்.

சோழன் — சோழதேச ஸ்தாபகன். இவன் திஷ்யந்தன்பௌத்திரனை ஆசிரிதன் மகன்.

சோழன் இராசசூயம்வேட்டபெருநற்கிள்ளி — யுத்தத்தில் வல்லவன். கோச்சேரமான் யானைக்கட் சேய் மாந்தரஞ்சேர லிரும் பொறையை வெற்றி கொண்டவன். இவன்நண்பர் சேரமான் மாவெண் கோவும் கானப்பேர்தந்த உக்கிரப் பெருவழுதியுமாவர். இவனைப் பாடிய புலவர் ஔவையார், பாண்டரங் கண்ணனார், உலோச்சனார்முதலியோர்.

சோழன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நலங்கிள்ளி சேட் சென்னி— சிறந்த போர்வீரன். பலபோர்களிற் சயங்கொண்டவன். இவனைப் பாடியபுலவர் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார். சோழன் நலங்கிள்ளி சேட் சென்னி யெனவும் படுவன். [புறநா]

சோழன் உருவப்பஃறே ரிளஞ்சேட் சென்னி — இளஞ்சேட் சென்னி யென்றும் உருவப்பஃறேரிளையோனென்றுஞ் சொல்லப்படுவன். சோழன் கரிகாற் பெருவளத்தான் தந்தை. ஈகைவீர முதலியவற்றாற்சிறந்தவன். அழுந்தூர் வேளிடத்து மகட்கொண்டோனென நச்சினார்க்கினியருரையாலுணரப்படும். இவனைப்பாடியவர் பரணரும் பெருங்குன்றூர்க் கிழாருமாவர் [புறநா]

சோழன்கரிகாற் பெருவளத்தோன்— கரிகாற்சோழனிற்காண்க.

சோழன் கிள்ளிவளவன்— (1) குராப் பள்ளித்துஞ்சிய கிள்ளி வளவன். கருவூரை யழித்தவன். இவனைப் பாடிய புலவர் கோவூர் கிழார். (2) சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன். கல்வி ஈகை வீர முதலியவற்றாற் சிறந்தவன். இவன் இராசதானி உறையூர். இவனைப்பாடியபுலவர் ஆலத்தூர்கிழார் இடைக்காடனார் கோவூர்கிழார் மாறோக்கத்து நப்பசலையார் முதலினோர்.

சோழன் குராப்பள்ளித் துஞ்சியகிள்ளிவளவன்—ஒருசேரனுடன் பகைகொண்டு கருவூரை யழித்தவன். கோவூர்கிழாராற் பாடப்பட்டவன்.

சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன்—புலமை நிறைந்த ஒரு சோழன். சிறுகுடிகிழான் பண்ணனைப்பாடியவன். அப்பாடல் புறநானூற்றிலுள்ளது. கருவூரை முற்றுகைசெய்து சேரனை வென்றவன். ஈகையும் வென்றியு முடையவன். இவனைப்பாடிய புலவர்கள் ஆலத்தூர்கிழார் வெள்ளைக்குடி நாகனார்

மாறொக்கத்து நப்பசலையார் ஆலூர் மூலங்கிழார் ஐயூர் முடவனார் கோவூர்கிழார் நல்லிறையனார் இடைக்காடனார் ஆடுதுறைமாசாத்தனார் எருக்காட்டூர்த் தாயங் கண்ணனார் முதலியோர் [புறநா]

சோழன் செங்கணான் — கோச்செங்கட்சோழ நாயனாருக்கு நாமாந்தரம். சேரமான் கணைக்காலிரும்பொறையோடு பொருது அவனைப் பற்றிக் கட்டிச் சிறையிலிட்டவன். பதினெண் கீழ்க்கணக்கி லொன்றான களவழி நாற்பதின் தலைவன். பொய்கையாரால் பாடப்பட்டவன்.

சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னி—மிக்கவீரமுங் கொடையுமுடையோன். இவனைப்பாடிய புலவர் ஊன்பொதி பசுங்குடையார். [புறநா]

சோழன் நலங்கிள்ளி—சோழன் மாவளத்தான் தமையன். கவிசெய்யும்புலமையன். போர் புரிந்து வெல்லுதலில் விருப்புடையவன். பாண்டிநாட்டேழரணைகளை வென்று புலிக்கொடிநாட்டியவன். தாயத்தாரொடுபகைத்து அவர்களிருந்தஆவூரையும் உறையூரையும் முற்றுகை செய்தவன். இவனுக்குச் சேட்சென்னி, புட்பகை, தேர்வண்கிள்ளியென்றும் பெயர்கள்வழங்கும். உறையூர்முதுகண்ணன் சாத்தனாரம்பாடப்பட்டு உறையூர்அறநெறி நிறுத்தப்பட்டது. இவனைக்கோவூர்கிழாரும் ஆத்தூர் கிழாரும் பாடியுளர்.

சோழன் நலங்கிள்ளி தம்பி மாவளத்தான—தாமப்பல் கண்ணனாராற் பாடப்பட்டவன். [புறநா]

சோழன் நல்லுருத்திரன்— சோழனல்லுத்தரன் என்றுஞ் சொல்லப்படுவன். கவிபாடும் புலமைமிக்கவன். முயரசியுடையார்பால்விருப்பும் அஃதில்லார்பால் வெறுப்புமுடையானெனப் புறநானூற்றில் இவன் பாடிய 190 - வது பாட்டினால் அறியத்தகும்.

சோழன் நெய்தலங்கான விளஞ்சேட்சென்னி—ஊன்பொதி பசுங்குடையாரால் பாடப்பெற்றவன். இவனரசாயிருந் தரியகாலத்து அரசு பெற்றவனாகலின் இப்பெயரேற்றவன. [புறநா]

சோழன் பெருந்திருமாவளவன் — பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியின் நண்பரிலொருவன். காவிரிப்பூம் பட்டினத்துக் காரிகண்ணனாராலும், உறையூர் மருத்துவன் தாமோதரனாராலும் பாடப்பெற்றவன்.

சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளி—தித்தனென்னுஞ் சோழன் புத்திரன். தந்தையைப் பகைத்து வறுமையுற்றுப் புல்லரிசியுண்டுசில காலமிருந்து பின்னர் அரசுபெற்று முசுகாவனாட்டு ஆலூர் மல்லனைப் பொருது கொன்றவன். இவனைப் பாடினார் சாத்தந்தையார் பெருங்கோழிநாய்கன்மகன் கண்ணனார்.

சோழன் மாவளத்தான்—சோழன்நலங்கிள்ளிக்கிளவல். சோழன் நலங்கிள்ளி தம்பி மாவளத்தானென்றுஞ் சொல்வதுண்டு. தாமப்பல் கண்ணனாரால் பாடப்பட்டவன்

சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி—சேரமான் அந்துவஞ்சேரலிரும்பொறையின் பகையரசன். உறையூர் ஏணிச்சேரி முடமோசி

யாராற் பாடப்பட்டவன்.

சோழன்வேற்பஃறடக்கைப் பெருநற்கிள்ளி — சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனோடு போர்புரிந்திறந்தவன். பரணராலும் கழாஅத்தலையாராலும் பாடப் பட்டவன். சோழன் வேற்பஃறடக்கைப்பெருவிறற்கிள்ளியென்றுஞ் சொல்லப்படுவன்.

சோழியவேனாதி திருக்குட்டுவன்— (1) ஈகை மிக்கவன். எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனாராற் பாடப்பட்டவன். (2) நெடுமுடிக்கிள்ளியின்மந்திரிகளி லொருவன்.

சோணசூடாமணி பாண்டியன்—மதுரையை யாண்ட ஐம்பத்தெட்டாம் பாண்டியன்.

சோனகம்—ஒருதேசம். ஆரியதேசத்திற்கு மேற்கிலுள்ளது.

சோனை—ஓராறு. வச்சிரநாட்டைச் சார்ந்துளது.

## சௌ

சௌகந்திகம் — ஒரு தீர்த்தம். இது குபேரன் நந்தனவனத்தி லுள்ளது இச்சௌகந்திக மலரே வாயுவால் திரௌபதியின்முன் னெறியக்கண்டு அத்தகைய மலரொன்றுவேண்டுமெனக்கேட்ப, வீமன் அதற்கிணங்கி அங்ஙனமே பெரும்பிரயாசமுற்றுக்கொணர்ந்து கொடுத்தனன்.

சௌநகன்—ஓரிருடி. சுநகன் மகன். கிருத்திசமதன் பௌத்திரன். பிறக்கையிலே தபோநியதியோடுதித்த மகாத்மா.

சௌநந்தை—விதூரதன்மகள். மூதாவதியென்றும் பெய ருடையாள். இவள் நந்தன வனத்தில் தோழிகளோடு விளையாடிக் கொண் டிருக்கையில் குஜம்ப னெனும் அரக்கனாற் பாதலத்திற் கொண்டு போய் மறைததுவைக்க, வற்சந்திரன் அவ்விராக்கதனைக் கொன்று இவளைச் சிறைமீட்டு மணம் புரிந்தனன்.

சௌந்தரநாயகி—(1) திருக்கோணம்பம். (2) திருப்பெரும்புலியூர் இந்த க்ஷேத்திரங்களில் உமாதேவியாருக்கு வழங்குந் திருநாமம்.

சௌந்தரபாண்டியர்—சோம சுந்தரபாண்டியர். தடாதகைப் பிராட்டியார்கணவர். சிவாமிசமா யுள்ளவர். மதுரையையாண்ட மூன்றும்பாண்டியர்.

சௌந்தராதிகன்—நால்வகைப் பௌத்தமதத்தரி லொருசாரான்.

சௌந்தரியலகரி— சங்கரா சாரியர் தேவியைத துதித்த ஒருவடநூல். இது தென்மொழியிலும் செய்யப்பட்டுளது.

சௌந்தரியந்தாதி—ஒரு தமிழ்ப் பிரபந்தம். சததிதுதியாயுள்ளது.

சௌந்தரேசர்—திருநாரையூரில் சிவபிரானுககு வழங்குந்திருநாமம்.

சௌபரி — (1) ஓரிருடி. யமுனைத் துறையிற் பலகாலந் தவ மிருந்து மாந்தாதாவெனு மன்னவ னிடஞ் சென்று தனக்கொரு கன்னிகை வேண்டுமென, மன்னவன் அந்தப்புரத்திற் கனுப்பித் தன்குமாரத்திகளில் யார்விரும்புமாயினும்மணஞ் செய்விப்பதாகக்கூறி, இவர் வடிவைக்கண்டு எல்லாக் குமாரத்திகளும் விரும்ப, அப்படியே மணம் புணர்த்தி யனுப்ப, நெடுங் காலம் அவர்களைக் கிரீடித்துக் கொண்டிருந்தவர். (2)வேதமித்திரன்சீடன்.

சௌமியன்—சுவாதசருத்திரரி லொருவன்.

சௌம்பகம்—ஓர்நகரம். இது சிவாக்கினைப்படி மயனால் நிருமித்துச் சால்வனுக்குக் கொடுக்கப்பட்டது.

சௌரசங்கிதை—ஸ்காந்த புராணத்தின் ஆறு சங்கிதைகளிலொன்று. இது சூரியனாற் சொல்லப் பட்ட ஆயிரங் கிரந்தங்களை யுடையது.

சௌரசேனி—சூரசேன தேசத்தில் வழங்கும் பிராகிருத பாஷை.

சௌரபுராணம்—பதினெண் உபபுராணங்களி லொன்று.

சௌரபேயி—ஓரப்சரசு.

சௌராஷ்டிரம்—(1) ஒரு பாஷை. (2) ஒரு தேசம் இது சூராட் என வழங்குகிறது.

சௌரி—(1) நிருதியின்மகள். தாரகாசுரன் மனைவி 2) கண்ணன். சூரன்மகனான வசுதேவன் புத்திரனாகலின் இப்பெயரேற்றனன்.

சௌவீரம்—ஒருநகரம். சிபிமகனான சௌவீரனால் நிர்மிக்கப்பட்டது.

சௌவீரன் — சிபிபுத்திரன். இவன் நிர்மித்தது சௌவீர நகரம்.

சௌனஹம்—ஒருநகரம். பலிமகன் சுனஹனால் நிர்மிக்கப்பட்டது.

## ஜ

ஜகதேகமல்லன்—பாண வமிசத்துப் பிறந்த ஓரரசன். மூதலாம் விஜயாதித்தன் மகன். இவனுக்கு மல்லனென்றும் பெயர் [மணி]

ஜகநாதபாண்டியன் — அரிமர்த்தன பாண்டியனுக்குப்பின் மதுரையை அரசுசெய்தவன். அறுபத்து நான்காம் பாண்டியன்.

ஜகந்நாதம்—ஒரு விஷ்ணுக்ஷேத்திரம். இஃது ஒட்டரதேசத்தி லுள்ளது கிருஷ்ணன் மரணமுற்ற பின்னர் அத்தேகம் தகனமாகுகையில்வெள்ளம் பெருகிக் காஷ்டத்தின்மேல் எரிந்து குறைந்த தேகத்தை யடித்துக் கொண்டு போய்ச் சேர்த்த விடம். அவ்வுடல் கண்ணனுடலெனத் தெரிந்த சில பக்தர்கள் அதனை யொருமரத்திற் சபுடகஞ் செய்து அம்மரத்தை விக்கிரகமாக்கி யங்கே நிறுத்தினர். இதுவே அந்த ஸ்தலத்தின் காரணம். இராமாவதாரத்தில் வாலியை மறைந்துநின்று வாளிதொட்டபடி அவ்வாலி வனசரனாயிருந்து கண்ணன் காலைப் பறவையென்று கணையெய்ததும், காந்தாரி சாபப்படி கண்ணனுடல் வேகாப்பிணமானதும் சோதருகையில் எத்தகையரையும் பழிவினை நீங்காதெனப் புலப்படுத்துகின்றன.

ஜகராஜசேகரன்—செகராச சேகரனிற் காண்க.

ஜடபரதர்—அரசுமுதலிய யாவுந்துறந்துவனத்தில் தவஞ்செய்துகொண்டிருந்த பரதராஜா. சிங்கநாதத்திற்குப்பயந்து கருவுயிர்த்திறந்தமானின்கன்று கங்கையில் மிதந்துசெல்லக்கண்டு எடுத்துவளர்த்து அக்கன்றின்மேலேயே கருத்துடன் உயிர் நீங்கி மானாகப் பிறந்து, மீண்டும் அந்தணனாயுதித்து யாவு முணர்ந்தும் உணராதார் போல் ஜடனாக நடித்தமையின் இப் பெயரேற்றவர். இவரை ரகூகணனெனு மரசன் சேவகர் பற்றிச்சென்று காளிக்குப் பலியிடப் போகையில், காளி பிரசன்னமாகி உயிர் காத்து அவ்

னைப் பெற்றவர். மற்றொரு சமயம் அச்சேவகர் அரசன் சிவிகையைத் தாங்குமாறு செய்ய, அரசனை இவர் மஹானென்றுணர்ந்து பணிந்து ஞானோபதேசம் செய்யப்பெற்று குருவாகக்கொண்டனன்.

ஜடபர்வதங்கள்—நீலகிரி நிஷதகிரி இவற்றிற்கிடையேயுள்ள பர்வதங்கள்.

ஜடர்—ஜடபர்வதத்தில் வசிப்போர்.

ஜடாசுரன்—அநுமனால் கந்தமாதனகிரியிற் கொல்லப்பட்ட ஓரசுரன்.

ஜடாயு—அருணன்மனைவி சியேனியிடம்பிறந்த இரண்டாம் புத்திரன். கசியபன் பௌத்திரன். சம்பாதிக்கிளவல். இவனைப்பற்றிய பிறவிடங்கள் சம்பாதியிற் காண்க.

ஜடிலன் — கோதமர் மரபி லுதித்த ஒருவன்.

ஜடிலை—ஜடிலன்மகள். இவள் எழுவருக்குப் பொது மனைவி.

ஜநந்தனர்—சங்கராசாரியர் முக்கிய மாணாக்கரிலொருவர். இவருக்குப் பத்மபாதரென்றும் பெயர்.

ஜந்தன்—(1) சோமகன் மகன். (2) விருஷதன் தமயன்.

ஜபேசுவரம் — நைமிசாரணியத்தில் ஒரு சிவக்ஷேத்திரம்.

ஜமதக்கினி--மகருஷி. ரிசிகமுனிவர் புத்திரர். தாய் சத்தியவதி. இவர் மனைவி இரேணுகை. புத்திரர் உருமதி உற்சாகன விசுவாசன் பரசுராமன் எனுநால்வர். இவர் மனைவி இரேணுகை தண்ணீர் கொண்டுவரச்சென்று கந்தர்வ ராசனாகிய கார்த்த வீரியார்ச்சுனனைக் கண்டு அதிசயித்து வந்ததுணர்ந்து, தன் புத்திரன்பரசுராமனை நோக்கி இவளைக் கொல்லுகவெனப், பரசுராமன் உடனே உடைவாளையுருவி வெட்டியொழித்துத் தந்தையை நோக்கித் தாயையெழுப்பித்தர வேண்டுமென அப்படியே எழுப்பியவர். இரேணுகை அதன்மேல் சிவார்ச்சனைசெய்து சத்திகளிலொருத்தியாய்ச் சிவபக்தி சிவார்ச்சனை முதலியன இல்லாரைப் பீடிக்குஞ் சிறுதெய்வமாயினள். இவளை மாரியம்மையென்பர். இவற்றையெல்லாமுணர்ந்த கார்த்த வீரியார்ச்சுனன் ஜமதக்கினி முனிவரைக் கொன்றொழித்தனன். அதனாற் பரசுராமர் சினங்கொண்டு க்ஷத்திரியர்களை இருபத்தொரு தலைமுறைவரையில் துவம்சஞ்செய்து அவர் குருதிநீரால்பிதிர்தர்ப்பணஞ் செய்து பழிவாங்கினன். இப்பாவம் நீங்கக் கடலிடைக் கண்டநாடாகிய கேரளம் [மலையாளதேசம] தானமாகக் கொடுக்கப்பட்டது.

ஜம்புகன் } ஜம்பன் } தாரகாசுர யுத்தத்திலிறந்தவன். இவனைக்கொன்றவன் இந்திரன்.

ஜம்புகுமாரன்—அரக்கன். சூர்ப்பணகைமகன். இவன் தந்தை வித்யுஜ்ஜிஹ்வன்.

ஜம்புகேசுவரம்—காவிரிக் கரையிலுள்ள சோழநாட்டுச் சிவஸ்தலங்களிலொன்று. இது அப்புலிங்கம். கோச்செங்கட் சோழநாயனார் திருப்பணிசெய்தது. சுவாமிபெயர் ஜம்புகேசர். அம்மையார் அகிலாண்டேசுவரி. ஸ்தலவிருக்ஷம் நாவல்.

ஜம்புமாலி—பிரஹஸ்தன்மகன். இராவணன் சேனாநாயகரில் ஒருவன். அநுமான் அசோகவனை யழித்த

போது சொல்லப்பட்டவன்.

ஜயதேவர்—வடமொழியிற் கீதகோவிந்தமெனு நூலியற்றியவர். இவர் மனைவி பத்மாவதிக்குக் கண்ணபிரான் காக்ஷிதந்தருளினர்.

ஜயத்சேனன்—(1) சார்வ பௌமன் மகன் (2) பாண்டவர் விராடபுரத்தில் அஞ்ஞாதவாசஞ் செய்தபொழுது நகுலனுக்குப் பெயர்.

ஜயத்திரதன்—(1) எட்டாம் பிருகத்திரதன் மகன். இவன் பாரிசூத வமிசத்தனாதலின் அவன்பாலுதித்த விஜயனும் அவன் வமிசத்தாரும் சூதரெனப்படுவர். (2) திருதராஷ்டிரன் மருகன் (3) திதிக்ஷு மகன். (4) பிருகத்காயன் மகன். இவன் மகன் விசுவஜித்து.

ஜயத்துவசன்—யது மரபிற் கார்த்தவீரியார்ச்சுனன் ஜேஷ்டகுமாரன். இவன்மகன் தாலசங்கன்.

ஜய நந்தி வர்மன்—பாண வமிசத்து ஓரரசன். ஆந்திரதேசத்தின் மேற்குள்ள நாட்டையாண்டவன் [மணி]

ஜயந்தபுரம்—நிமியால் நிருமிக்கப்பட்டதொரு நகரம். கௌதமர் ஆச்சிரமத்திற் கருகிலுள்ளது.

ஜயந்தன்—(1) இந்திரன் மகன். இவன் பேரழகினன். இவனுக் கொப்பாக மன்மதனையும் குபேரன் மகனான நளகூபரனையும் அழகிற் கூறுவர். (2) விஷ்ணுபரிசாரகரி லொருவர். (3) விசுவாமித்திரன் மகன். (4) தருமனுக்கு மருத்துவதியிடம் பிறந்த இரண்டாம் புத்திரன். (5) பாண்டவர் அஞ்ஞாத வாசத்தில் வீமனுக்கு வழங்கியபெயர்.

ஜயபலன்—அஞ்ஞாத வாசத்தில் சகதேவன் கொண்டபெயர்.

ஜயர்கள்—கற்பாரம்பத்தில் சிருஷ்டி செய்யப்பட்ட தேவருஷிகள். இவர்கள் தொகையாற் பன்னிருவர்.

ஜயவிஜயர்—விஷ்ணுவின் பரமபதத்தின் துவாரபாலகர். உள்ளே பிரவேசிக்கும்படி வந்த துர்வாசமுனிவரைத் தடுத்து அவரால் அசுரராகும்படி சபிக்கப்பட்டு, திருமாலிடம் முறையிட, அச்சாபம் தவிக்க முடியாததென, அங்ஙனமாயின் அவ்வசுரராயகாலத்திலும் தேவரீரிடத்தி லன்பகலா திருக்கவேண்டுமென், திருமால் எமக்குப் பக்தி செய்வதாயின் பத்து ஜனனத்திலும் எம்மைப் பகைப்பதாயின் மூன்று ஜனனத்திலும் உங்கள் பதவியை யடைவீர்களென, இவர்கள் தேவரீரைப் பகைத்தேனும் மூன்று ஜனனங்களிலேயே தேவரீரை யடைவோமென்று, இரணியன் இரணியகசிபன்; இராவணன் கும்பகர்ணன்; சிசுபாலன் தந்தவக்கிரன் எனத் தோன்றித் திருமாலைப் பகைத்து விஷ்ணுவின் அவதாரமூர்த்திகளாற் சங்கரிக்கப்பட்டுத் தமது துவாரபாலகத் தன்மையை யடைந்தவர்.

ஜயன்—(1) யதுமரபினனான சாத்தகிமகன். (2) யதுமரபில் வசுதேவன் தம்பி அநகன் மகன் (3) மிதிலாநகரத்துச் சுருதன்மகன் (4) பாண்டவர் அஞ்ஞாதவாசத்தில் தருமனுக்குப் பெயர்.

ஜரற்காரன்—ஒரு பிரமருஷி. யாயாதி வமிசத்தவன். இவன்மனைவி. ஜரற்காரியின் மடியிற்சாய்ந்து நித்திரை செய்கையில் சந்தியா காலமென் றெழுப்ப வெகுண்டு சபித்துப்பிரி

ந்தவன்.

ஜரற்காரி—காசிபர் மனைவியான கத்ருவையிடம்பிறந்தவள். வாசுகிக் கிளையவள். ஜரற்காரன்மனைவி.

ஜரை—ஜரையிற் காண்க.

ஜராசந்தன் — உபரிசரவசு பேரன். பிருகத்திரதன் மகன். சகதேவன் தந்தை. கிரிவிரச நகரத்தினன். இவன்தந்தை பிருகத்திரதன் மகப்பேறின்றி மாழ்கிப் பன்னாள் கடுந்தவம்புரிந்து கௌசிகமுனிவர் பிரசாதித்த மாங்கனி யொன்றனைத் தன் பட்டமகிஷிபால் கொடுப்ப அவள் அதை யிருகூறுசெய்து தான் ஒரு பாதியை நுகர்ந்து தன் சக்களத்திக்கு மற்றொருபாதியைக்கொடுப்ப,இருவரும்கருப்பமுற்றுஅரைகூறாகிய இருபிள்ளைகளைப் பெற்றார்கள். அப்பொழுது ஜரையெனப்பெயரியஅரக்கிமாயத்தால்அவற்றைக் கவர்ந்து சென்று ஓரிடத்தில்வைக்க அவையிரண்டும் ஒன்று சேர்ந்தமையின் அவள்வியந்து பிருகத்திரத னிடங் கொடுத்தனள். ஜரையினால் சந்தி செய்யப்பட்ட காரணத்தால் ஜராசந்த னெனப் பெயரெய்தினன்.

தன் மருகன் கம்சனைக் கண்ணன் கொன்றமைக்காக வெகுண்டு மதுரையின்மேற்படையெடுத்துச்சென்று கண்ணனைப்போரில் வென்று துவாரகைக் கோட்டியவன். இறுதியில்பாண்டவர் இராசசூயயாகத்தில், கண்ணனை யிகழ்ந்தபோது வீமசேனனாற் கொல்லப்பட்டவன். இவன்வீமனாற் சங்கரிக்கப்பட்ட அறுசமவீரரிலொருவன்.

ஜரிதை—சாரங்கஜாதிப்பெண். மந்தபாலருஷி பத்தினி.

ஜரை—அரக்கி. ஜராசந்தன்இருகூறுகளையும் சேர்த்து ஒன்று படுத்தியவள்.

ஜர்ஜ்ஜரன்—இரணியாக்ஷன்புத்திரரிலொருவன்.

ஜலதரை—ஒரு ஸ்திரீ; பாண்டவரிலொருவனான வீமனைக் கூடிச் சுகுணனைப் பெற்றவள்.

ஜலந்தரன்—சலந்தரனிலும்பிருந்தையிலுங்காண்க.

ஜலபதை—ஓரப்சர ஸ்திரீ.

ஜனகன்—(1)நிமிபுத்திரன்.இவனுக்கு விதேக னென்றும் மிதிலனென்றும் பெயர்களுள. மிதிலனிற் காண்க (2) மிதிலை மன்னரி லொருவன் ஹ்ரஸ்வரோமன் மகன். தர்மத்துவஜனென்றும் பெயர். இவனரண்மனை ஒரு காலத்திற் றீப்பற்றி யெரிய, சிறிதுங் கவலைப்படாது, அவ்வரண்மனைப்புறத்தேயுலரவைத்த தன் கௌபீனத்திற்காக வோடிய சுகமுனிவரை நல்லதுறவு என்றல்லங்ஙனஞ் செய்தவன். (3) சீதையின்பிதா.

ஜனமேஜயன்—(1) புரஞ்சயன்மகன் (2) பூருவன் மகன் (3) பரிக்ஷித்து புத்திரன். அபிமன்யுவின்பேரன். உதங்கமுனி உபதேசத்தாற் சர்ப்பயாகஞ் செய்தவன்.

ஜனஸ்தானம்—தண்டகாரணியத்திலே பஞ்சவடி தீர்த்தத்திற் கருகிலுள்ள ஓரிடம். இராவணன் மூல பல சைநியத்திற் சிறிது வசித்தஇடம்.

ஜனார்த்தனன்—திருமால்.

ஜன்ஹு—(1) குரு புத்திரரின்மூன்றாமகன் (2) ஒரு மகருஷி. பெரும் பிரயாகத்துடன்பகீரதன்கொண்டு

வந்தகங்கை தன்யாகசாலையை யழியவே யிரைந்து வருவது கண்டு யாக மழியுமென்று அதனை யுட்கொண்டு மீண்டும் பகீரதன் வருந்திக் கேட்டபொழுது தன் காது வழியில் விடுத்து ஜாநவி யென அதற்குப்பெயராக்கியவன். இவன் மகன் சுமந்திரன்.

ஜாஜலி—ஓரிருடி. தவஞ்செய்துகொண்டிருக்கையில், இவர் சடையில் சிட்டுக் குருவிகள் கூடு கட்டிக் குஞ்சு பொரித்து வசித்தன.

ஜாதகர்ணி—சாகல்லியன் சீஷன். இவன் சீடன் ஜாபாலி.

ஜாதவேதன்—ஆகவனீயமுதலிய வடிவமாகி விளங்கும் அக்கினி.

ஜாநவி—கங்கை. இக்காரணம் ஜன்னு முனிவரிற் காண்க.

ஜாபாலி—(1) தசரதராமன் காலத்திருந்த ஓரிருடி. இவர் நையாயிகர். (2) ஜாதகர்ணி மாணவகனான ஓரிருடி.

ஜாமதக்கினி—ஜமதக்கினி முனிவர் குமாரனான பரசுராமனுக்குத் தத்திதாந்தநாமம்.

ஜாம்பவதி—ஜாம்புவந்தன் மகள். கண்ணன் அஷ்டபாரியரி லொருத்தி. சாம்பனைப் பெற்றவள்.

ஜாம்பவந்தன்—(1) சுக்கிரீவன் மந்திரியாகிய கரடியரசன். (2) சியமந்தகமணி காரணமாக கண்ணனாற் கொல்லப்பட்டவன்.

ஜீமூதவாகனன்—(1) ஒருவித்தியாதரன். ஒருநாக குமாரனைக் காக்கு நிமித்தம் தன்தேகத்தைக் கருடனுக்குக் கொடுத்த பிரதாபவான். (2) கௌதம புத்தர் அவதாரங்களில் ஒருவனாக எண்ணப் பட்டவன். ஸ்ரீஹர்ஷகவி செய்த நாகானந்தம் இவன் சரிதையைக் கூறும்.

ஜீமூதன் — யதுமரபில் வியோமன் புத்திரன்.

ஜீயராண்டான்—வைணவ சிங்காசனாதிபதிகள் எழுபத்து நால்வரி லொருவர்.

ஜீவலன்--இருதுபர்ணன் இரதசாரதி.

ஜேஷ்டாதேவி—ஜ்யேஷ்டா தேவியிற் காண்க.

ஜைமினி—வியாச சீஷரில் ஓரிருடி. சாமவேதி. மார்க்கண்டேயரால் தர்மபக்ஷிகளிடம் உபதேசம் பெற்றவர்.

ஜைனர்— இரவி யுண்ணாதவர்கள். வேதத்தை நம்பாதவர்கள். ஜீவர்கட்கு இம்சை செய்யலாகாதெனுங் கொல்லாவிரதமே அவர்கட்குமுக்கியசீலம். இவர்கட்குக் கடவுள் அருகதேவர். இவர் சீதாம்பரர் திகம்பரரென இருபாற்படுவர். இம்மதத்தினர் காஞ்சி மைசூர் முதலிய விடங்களிலுளர்.

ஜைகீஷவ்வியன்—எல்லாப் போகங்களையும் வெறுத்தக் காசியிலிருந்து நிஷ்காமியத் தவஞ்செய்து முத்தி யடைந்த ஒரு முனிவன். [சைவபு]

ஜ்யாமகன்—யதுமரபின் ருசிகன் மகன் விதர்ப்பன் தந்தை. சியாமகனென்றும் வழங்கும்.

ஜ்யேஷ்டா—க்ஷீராப்தி மதனகாலத்திற்பிறந்தவள். வருணன் மனைவியரிலொருத்தி. இவளை ஜேஷ்டை [மூத்தாள்] என்றுஞ் சொல்லுவர். இவளுக்கு வாகனம் கழுதை-கொடிகாகம்-புத்திரன் அதர்மன்-தோப்பிள்ளைகள் பயம் மகாபயம்

த்பு என்போர்.புத்திரி சுரமிக்கை.

ஜ்யோதிஷம்--வேதாங்கங்கள் ஆறனு ளொன்று.

ஜ்யோதிஷ்மந்தன்— சுவாயம்பு மநு புத்திரரி லொருவன். குசத்தீவுக் கரசன். இவன் புத்திரர் எழுவர்.

ஜ்வராபஹரணமூர்த்தி--மூன்றுகால் களும் நான்கு கரங்களுங்கொண்டு வாணசுரன் மாளிகையில், கண் ணன் விடுத்த சீதளசுரத்தின் வீற டக்கிய சிவமூர்த்தி. இமமூர்த்தி யைப் பூசிப்போர் சர்வசுரபீடையு மகல்வர். இம்மூர்த்தி சுருட்டுப்பள் ளியிற் பிரதிஷ்டித் திருப்பதாகக் கேள்வி.

ஜ்வாலாமுகிபீடம்—சத்தி பீடங்கள் அறுபத்துநான்கனுளொன்று. இது இங்குலேயிலுள்ளது.

# ஞா

ஞாயிறு—திருவொற்றியூருக் கருகிலு ள்ளதோரூர். இதுவே சங்கிலிநாச் சியார் திருவவதாரக்ஷேத்திரம்.

ஞாயிறுகிழார் — தொண்டை நாட்டு இருபத்து நான்கு கோட்டங்களி லொன்றாகிய புழற் கோட்டத்து. ஞாயிறென்னு மூரில் வேளாண் குலத்திலவதரித்தவர். இவர்குமாரி சங்கிலிநாச்சியார் (சுந்தரமூர்த்தி சுவாமிகள் மனைவியரிலொருவர்.)

ஞான கலாம்பையார் — பட்டினத் தடிகளின் தாயார்.

ஞானசத்தி —இச்சாசத்தியில் ஆயிரத் தொருகூறுகொண்டது. சர்வான் மாக்களின் கர்மங்களையும் அக்கன் மங்களுக் கீடான தநுகரணபுவன போகங்களையும்உபாதானத்திரயங் களினின்றும்உண்டாக்குவது. சத் தர்க்கு ஞானவொளியாய்ச் சர்ம சக்ஷுராதி யக்ராஹ்யமான தே ஜோரூபமா யுள்ளது.

ஞானப்பிரகாசசுவாமிகள்—ஈழநாட்டு வேளாண் குலத்தினர். இவர் வட மொழியில் வல்லவர். திருவண்ணா மலையிற் காஷாயம் பெற்றவர். பௌஷ்கராகமத்திற்கு வடமொழி வியாக்கியானஞ் செய்தவர். சித் தாந்தசிகாமணி - பிரமாணதீபிகை முதலிய நூல்களியற்றியவர். சிவ ஞான சித்தியாருக்குத் தமிழுரை யொன்று செய்துளர். இவர் மதம் சிவசமவாதம்.

ஞானப்பூங்கோதை— திருக்காளத்தி யில் உமாதேவியாருக்கு வழங்குந் திருநாமம்.

ஞானவல்லியம்மை — திருச்சேறை யூரில் உமாதேவியாருக்குவழங்குத் திருநாமம்.

ஞானவாசிட்டம்— வசிட்ட முனிவ ரால் வடமொழியிற்செய்யப்பட்ட யோகநூல். இது தசரத ராமனுக் குபதேசித்தது. இதனை ஆளவந்தா ரென்பார் தமிழ்க்கவிபடுத்தினர்.

ஞானவெட்டி—இது ஒரு வேதாந்த நூல்போல் விளக்குவது இதனை யாக்கினோர் இவரென்று நன்கு புல ப்படவில்லை. திருவள்ளுவநாயனார் செய்ததாகச் சிலர் சொல்லுவரா யினும் அதன் சொற் போக்கும் பொருளமைதியும் அவருடைய தன்றென நன்குவிளக்கும். அன்றி யும் தமக்குப் பிற் றோன்றிய கம் பநாடரையிழித்து"கம்பன் வம்பன் அதிதரா மாயணத்தி லநேகம் பொ ய்தான்" என வருங்காலங் குறி த்து மூற்கூறூர். இன்னு ரன்ன

அசந்தர்ப்பங்கள் பலவுள வாகலின் திருவள்ளுவராற் செய்யப் பட்டதன்றென்பது மாத்திரந் துணிபு.

ஞானாமிர்தம்—ஒரு சைவ சமய சாத்திரம். இது வாகீசரால் எழுபது அகவற்பாக்களாகத் தர்க்க முறையே பதிபசுபாச விலக்கணங்களை விளங்கக்கூறுவது.

ஞானோதயம்—ஒருவேதாந்த நூல்.

## டி

டிபகன்—ஹம்சன் சகோதரன். இவர்களிருவரும் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்து ஆயுதங்களாலிறவா வரம்பெற்றவர். ஜராசந்தனுக்கு நண்பராய்க் கண்ணனுடன் அடிக்கடிபோருக்குவருவதுகண்டு, டிபக னிறந்தானென ஹம்சனுக்கும், ஹம்சனிறந்தானென டிபகனுக்குங் கூறிச்செல்ல இருவரும் பரஸ்பர ஒற்றுமையா லிறந்தனர்.

## த

தகடா—ஓரூர். இதுவடமொழிப்பெயர் தமிழில் தகடூரென வழங்கும். இது மைசூரிராச்சியத்திலுள்ளது. அதியமானென்றும், இராஜராஜ நரேந்திர னென்றுஞ் சொல்லப்பட்ட கேரளதேசத்தரசன் மகனை எழினி யென்பவன் அரசு செலுத்தியவிடம்.

தகடூரெறிந்த பெருஞ்சேர லிரும்பொறை—எட்டுத்தொகையு ளொன்றான பதிற்றுப்பத்தில் எட்டாம் பத்தினை அரிசில்கிழார் தன்மீது செய்ததற்கு ஒன்பது நூறாயிரம் பொற்காசையும், தன் சிங்காதனத்தையுங் கொடுப்ப, அப்புலவர் இரந்து வேண்டு கோடற் கிணங்கி, அவ்வரசியலை மீண்டும் பெற்று, தனது மந்திரக்கிழமை கொடுத்தவன். இவன பதினேழியாண்டு அரசுவீற்றிருந்தான்.

தகடூர்—தகடாவிற்காண்க.

தகடூர்யாத்திரை—ஒரு நூல். இது ஏறக்குறைய இறந்து இங்கு மங்கும் எடுத்துக்காட்டாக மிகச் சிலசெய்யுள்களை யுடையது.

தக்கயாகப்பரணி—இது சைவசமயத்தின் அருமைகளையும் திருத்தொண்டர்களின் பேரும் பாட்டையும் பாராட்டிக்கூறும் எண்ணூறு தாழிசைக ளடங்கிய ஒருநூல். இதன் ஆசிரியர் கூத்தன் கவிச் சக்கரவர்த்தி. இதற்குப்பழையதோருரையுள்ளதாகக் கேள்வி.

தக்கன், தக்ஷன் — (1) காசிபன்மனைவி கத்துருவை மகன். பரீக்ஷித்து பாம்புகடித்திறந்தமையால், அவன் மகன ஜனமேஜயன் சர்ப்பயாகஞ் செய்து சர்ப்பங்களைக் கொன்றபொழுது ஆஸ்திகனாற் காக்கப்பட்டவன். தென்றிசையிற் பூமியைத் தாங்குவோன். (2) பரதன் மகன். (3) யதுமரபில் வசுதேவன் தம்பியாகிய விருகன் மகன்.

தக்ஷசிலை—பரதன்மகன் தக்ஷனுற்காந்தாரதேசத்தில் நிருமித்த நகரம்.

தக்ஷப்பிரஜாபதி, தக்கன், தக்ஷன் — பிரமமானச புத்திரரி லொருவன். நவப் பிரஜாபதிகளி லொருவன். இவன் மனைவியர் வேதவல்லி அசிக்னிமூர்த்தியோர். இவன் பிரமாவின் அங்குஷ்டத்தினின்று ஜனித்தவனென்று சிலநூல்கள் கூறும். சிவபெருமானை நோக்கித் தவஞ்

எடுத்த உமாதேவியைப் புத்திரியாகப்பெற்று சிவபெருமானுக்குத் திருமணமுடிப்பித்தவன் [தாக்ஷாயணியிற் காண்க] அசுவினியாதி இருபத்தேழு புத்திரிகளைச் சந்திரனுக்கு மணஞ்செய்வித்தவன். [சந்திரனிற் காண்க] இவன் சிவபெருமானை மதியாமல் ஒரு யாகஞ்செய்தமையின் சிவாகஞைப்படி திருநந்திதேவர் அங்குற்று, சிவனவியைத் தருகவென, இவன் மறுத்தமையின் இவ்யாக மழிகவெனக் கூறிப் போயினர். உடனே சிவபெருமானுக் குற்ற கோபாக்கினியில் வீரபத்திரருதித்துக் காளிகாதேவியுடன் பல பூதப் படைகள் புடைசூழத் தக்க யாகத்தையடைந்து அங்குள்ள பலதேவரைக் கரம் சிரமுதலியன துணித்து யாகத்தை யழித்துத் தக்கன் தலையை யறுத்தனர். பின்னர் உமாதேவியாருடன் சிவபெருமான் ஆண்டுற்று உமாதேவி விருப்பின்படி இறந்தோர் பலரையும் உயிர்பெறச் செய்கையில் பிரமன் தக்கனைக் காணும் அவனையும் எழுப்ப வேண்டுமென வேண்ட, அவன் தலை காணப்படாமையின் ஆட்டுத்தலை யமைத்தெழுப்பினர். தக்கன்நாணிச்சிவபெருமானைப்பணிந்து, பலகால் தவஞ்செய்து ஒரு சிவக்கணத் தலைவனாயினன்.

தக்ஷயஜ்ஞஹரமூர்த்தி } அஷ்டாஷ்டமூர்த்தங்களில் ஒரு சிவமூர்த்தி. இது வீரபத்திரமூர்த்தம். தக்ஷயாகத்தைத் துவம்சஞ்செய்தமையின் காரணப்பெயர். தக்ஷப்ரஜாபதியிற்காண்க.
தக்ஷஸம்ஹாரமூர்த்தி }

தக்ஷிணாமூர்த்தி—(1) சிவமூர்த்திகளிலொன்று. கைலாயத்தில் கல்லாலவிருக்ஷநீழலில் ஸநகாதியர்க்குமனமொடுங்கும் வண்ணஞ் சின்முத்திரைகாட்டித் தத்துவோப தேசஞ்செய்த மூர்த்தி. இது அஷ்டாஷ்டமூர்த்தங்களிலொன்று (2) பாண்டிநாட்டில் திருத்தங்காலில் வசித்த வார்த்திகனெனும் வேதியன்மகன் [சிலப்]

தக்ஷிணை—(1) ருசிப் பிரசாபதிக்கு (சுவாயம்புமகள்) ஆகூதியிடத்தில் உதித்தவள். தன் அண்ணன் யஞ்ஞனை மணம்புரிந்தவள் (2) காமரூபதேசத் தரசன் பிரிய தர்மன் மனைவி. பார்த்திவலிங்க பூஜையில் விசேஷ பக்தி யுடையவளா யிருந்து முத்திபெற்றவள் [சைவபு]

தங்கால்பூட்கோவலனார்- புறநானூறு பாடிய புலவர்களில் ஒருவர்.

தசகண்டன் } பத்துத்தலைகளையுடையவ னென்பது பொருள். இராவணனிற் காண்க.
தசக்கிரீவன் }

தசகுமாரசரித்திரம் — கத்ய [வசன] காவியமான ஒருவடநூல். பத்துக் குமாரர் விஷயமாகச் செய்யப்பட்ட நூலாகலின், இப் பெயரேற்றது. இதனை யாக்கினோர் தண்டியாசிரியர். இதன்முதற்பாகம் இறந்துவிட்டதென்றும், அதுசோமதேவ பட்டராற் செய்து சேர்க்கப்பட்டதென்றுஞ் சொல்கிறார்கள்.

தசசீலம்—கொல்லாமை திருடாமை வியபிசரியாமை பொய் கூறாமை கள்ளுண்ணாமை யெனுமிவை பஞ்சசீலமென்றும், இவை இல்லறத்தார்க்கெல்லாம் உரியனவென்றும்; இவ்வைந்தோடு இரவில் உண்ணாமை

யில்லாத உணவைப் புசியாமை, சந்தன முதலிய மணமுள்ள பொருள்களை உபயோகியாமை, தரையிற் பாய் மேலே படுத்த லெனு மூன்றுஞ்சேர அஷ்டாங்க சீல மென்றும், இவை இல்லறத்தாரில் நிஷ்டாபரர்க்கே யுரியன வென்றும்; இவ் வெட்டனோடு நடனம் கீத முதலியவற்றை விரும்பாமை, பொன் வெள்ளிகளைத்தொடாமை யிரண்டுஞ் சேரத் தசசீல மென்றும் இப்பத்தும் துறவி கட்கே யுரியன வென்றும்; இப் பத்தில் வியபிசரியாமை நின்ற விடத்தில் பிரமசரியங் கூறப்படு மென்றும், தர்மிக சூத்திரமெனும் பௌத்த நூல் கூறும். [மணி]

சரதன்—(1) கன்மாடபாதன் பௌத்திரனாய மூலகன் மகன். இவன் மகன் விருத்தசர்மன். (2) அஜமகாராஜன் புத்திரன். இவன் அறுபதினாயிர வருடம் அரசு செலுத்தியவன். இவன் மனைவியர் மூவர். புத்திரப்பேறின்றிப் பன்னாள்வருந்திப் புத்திர காமேஷ்டி செய்து கௌசலையிடம் இராமனும், சுமித்திரையிடம் இலக்ஷ்மணனும் சத்துருக்கனும், கைகேயியிடம் பரதனும் புதல்வ ராகத் தோன்றப் பெற்றவன்.

ஒருகாலத்தில் அந்தணச் சிறவனொருவன் விருத்தர்களான தாய் தந்தையர்க்கு நீர் வேட்கை தணிக்கத் தடாகத்திற் சுரைக்குடுக்கையில் நீர்முகந்துகொண் டிருக்கையில் குடுகுடுவெனக் கேட்டவொலியால் யானையென்று கருதி அம்பினை வீழ்த்தியதனால் அவனிறப்ப அம்முநியோ ரிருவரும் புத்திர சோகத்தா லுயிர் துறக்கையில்தசரதனையுந்தம்மைப்போலப்புத்திர சோகத்தாலிறக்கும்படிசபித்தனர். அதனாலேயே இராமனைப்பிரிந்து உயிர் துறந்தவன். [கைகேயியிற் காண்க] (3) யதுமரபில் நவரதன் மகன் (4) உரோமபாதன்.

தசாரகன்—(1) நிர்விருதி புத்திரன். விலோமசுதன் தந்தை (2) மதுரையையாண்டயதுகுலமன்னன். காசிராசன்மகள் கலாவதியை மணந்து அவளைக் கலக்கப்புகுகையில், அவள்சிவதீக்ஷை யில்லாத உன்னைக் கலவேனென, கர்க்கமுனிவரிடம் தீக்ஷைபெற்றுக் கொண்டு வந்து அவளைச்சேர்ந்துவாழ்ந்திருந்தவன்.

தசாரணம்—ஒரு தேசம். காசிக்குத் தென்மேற்கிலுள்ளது.

தஞ்சை இராஜராஜேச்சுரம்—சோழனாற் பிரதிஷ்டிக்கப் பட்ட சிவாலயம் ஏரண்டமுனிவனிற்காண்க.

தஞ்சைமாமணிக்கோயில் — ஒருவிஷ்ணு ஸ்தலம். காவிரித் தென் கரையிலுள்ளது. பராசரமுனிக்குப் பிரத்தியக்ஷம். பூதத்தாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். நீலமேகப் பெருமாள். செங்கமலவல்லி. சௌந்தரிய விமானம். கன்னிபுஷ்கரணி அமுததீர்த்தம். வீற்றிருந்த திருக்கோலம்.

தஞ்சைவாணன்கோவை— மாறைநாட்டிலுள்ள தஞ்சாக்கூரி லிருந்தவனும், பாண்டியன் மந்திரியுமாகிய வாணனென்னுந் தலைவன்மீது பொய்யாமொழிப்புலவர் பாடியது. நாற்கவிராசநம்பி யியற்றிய அகப் பொருள் விளக்கமெனு மிலக்கண

னுவிற்கு இலக்கியமாக அமைந்துள்ளது. இதற்குக் குன்றத்தூர்ச் சொக்கப்பநாவலர் சிறந்த உரை செய்தனர்.

தடாதகைப்பிராட்டியார் — மதுரையையாண்ட மலயத்துவச பாண்டியன் மகப்பேறின்றித் தன் மனைவி காஞ்சன மாலையுடன் பன்னாள் தவங்கிடந்து, புத்திர காமேஷ்டியெனும் யாகஞ்செய்ய, அவ்யாகத்தினின்றும் உமாதேவியே மூன்று வயதுள்ள பெண்குழந்தையா யுதிக்க, அரசன் "மைந்தற் பேறு நகவிந்த மகஞ்செய்தேனதுவுமொரு பெண்மகவைத் தந்ததந்தோ, முகவிந்து நிலவொழுக வருபெண்ணு முலைமூன்றாய் முகிழ்த்து மாற்றார் காணாத தென்னேயோ" என்று மனம் வருந்துகையில், "மன்னவ நின் திருமகட்கு மைந்தர் போற் சடங்கனைத்தும் வழாது வேதஞ் சொன்ன முறை செய்து பெயர் தடாதகையென் றிட்டுமுடி சூட்டுவாயிப், பொன்னனையா டனக்கிறைவன் வரும்பொழுதோர் முலை மறையும் புந்திமாழ்கேல்" என்று அசரீரி யுண்டாகக் களித்து, அங்ஙனமே செய்து உரிய பருவத்தே மகட்கு மண்ணாட்டினை யளித்து வானாட்டை யடைய, பிராட்டி மநுமுறைப்படி செங்கோல்செலுத்தித் திக்விஜயஞ்செய்து திக்பாலர்களையும் வென்று கைலாயத்தை யணுக, சிவபிரானுணர்ந்து தாமே போர்க்கோலங்கொண்டு எழுந்தருளக் கண்டு, கண்ட மாத்திரத்திலே, ஒருமுலை மறைய நாணமும் அச்சமுங்கொண்டு, அருகிருந்த சுமதியெனும் மந்திரியால் தங்கணவரிவரேயெனக் கருதி நிற்கையில், சிவபெருமான் 'நீநகரடைக, யாம் வந்துமணப்பேம்" எனக்கூற, அங்ஙனமே மதுரை யடைந்து ஆங்குச் சிவபிரான் சோமசுந்தரரெனு நாமத்துடன் எழுந்தருளித் திருமணம் புரிய, சிலகால மிருந்து உக்கிர குமாரபாண்டியரை மகவாக வாய்த்து, இறைவனோடு கைலை யுற்றவர் [காஞ்சனமாலையின் முற்பிறப்பினை விச்சாவதியிற்காண்க]

தண்டகன் — (1) இக்ஷ்வாகு மகன். இவன வசித்த நகரழிந்த விடமே தண்டகா ரணியமென வழங்கும். (2) குமாரகடவுளின் இலக்ஷவீரர்களிலொருவன். (3) சுமாலிமகன். இராக்கதன.

தண்டகாரணியம் — தண்டகனெனப் பெயரிய இக்ஷ்வாகு மகன் நியாய விரோதியா யொழுகித் தந்தையால் நகர்கடக்கத் துரத்தப் பட்டு, விந்தகிரிக்கருகே மதுமந்த மெனு நகரமுண்டுசெய்து சுக்கிரனுக்குச் சீடனா யிருக்கையில், அவர் மகள் அரசையைக் காமுற்று வலியப்புணர, சுக்கிரன் சினந்து அவனையும் அவன் நகரத்தையும் மண்மாரியா லழித்தனன். அவ்விடமும் அதன் தென் புறமுமே தண்டகா ரணியமெனப்படும்.

தண்டபாணி — (1) இயமன் (2) காசியில முருகக்கடவுளுக்கு வழங்கும் திருநாமம். (3) பழனியில் விளங்கும் பிரசித்தமான சுவாமி.

தண்டன் — தண்டகனிற்காண்க.

தண்டாசுவன் — திர்டாசுவன். இவன் பிதா துந்துமாரன, ஆரியசுவனுக்

குப்பிதா.

தண்டி—(1) குமாரக்கடவுளின் இலக்ஷவீரர்களிலொருவன். (2) ஒரு வடநூற் புலவன் காளிதாசனுக்கு நண்பன். போஜ சமஸ்தானத்துப் பிரபல பண்டிதர் ஒன்பதின்மரி லொருவன். இவனாற் செய்யப்பட்டவை தசகுமார சரிதம் காவியாதரிசம். இக்காவியாதரிசனமே தண்டியலங்காரமெனத் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது.

தண்டியடிகணாயனார் — அறுபான்மும்மை நாயன்மாருளொருவர். அந்தகராகவே ஜனித்து சிவபக்தி மிகுதியால் திருவாரூர்த் திருக்குளத்து மண்ணைக் கூடையில் எடுத்துக் கொண்டு தடவிச்சென்று கரையில் கொட்டி வருகையில், அங்குள்ள சமணர் இழித்துப்பேச, சிவபிரானைப் பிரார்த்தித்துக் கண் பெற்று அச் சமணர்களைக் கண்ணிழந்து ஊரினின்று நீங்கும்படி செய்து அவர்கள் பாழிகளையுடைத்து அக் கற்களால் திருக்குளத்தைக் கட்டி முத்தியடைந்தவர்.

தண்டியலங்காரம்—தமிழ் அலங்கார நூல். வடமொழிக் காவியாதரிசத்தின் மொழிபெயர்ப்பு. முதனூலாசிரியர் பெயராலேயே வழங்குகிறது. இது பொதுவணி பொருளணி சொல்லணி யென மூன்றியலும், நூற்றிருபத்து மூன்று சூத்திரங்களுமாக விளங்குவது. நச்சினார்க்கினியர் முதலிய உரையாசிரியர்களெடுத்தாண்டிருத்தலின் அவர் காலத்திற்கும் முந்தியதென ஊகிக்கப்படும்.

தண்டினீபீடம்—சத்திபீடங்களறுபத்து நான்கனு ளொன்று. இது சண்டமுண்டியிலுள்ளது.

தண்டேசர்—தண்டியடிகள் நாயனாரிற் காண்க.

ததிமுகன் — சுக்கிரீவன் மாதுலன். வானரசேனைவீரரிலு மொருவன்.

ததிவாகனன்—அங்கன் மகன்.

ததீசி—(1) மகாருஷி சிறந்த சிவபக்தர் ஒருகாலத்தில் விஷ்ணு ஓரரசன் காரணமாகத் தம்மை யெதிர்த்துச் சக்கரத்தைப் பிரயோகிக்க அதைத் தம் வச்சிர யாக்கையிற் பட்டுவாயமடியச் செய்தவர். தமதாற்றலால் தமது காற்பெருவிரலினின்று பல விஷ்ணு வடிவங்களைப் படைத்து அவரொடு போருக்கு விட, விஷ்ணு சகியாமல் துதித்துப் போற்ற விடுத்தவர். தக்ஷயாகத்தில் சிவபெருமானுக்கு அவிகொடுக்க வேண்டுமென்று பலவகையாகவுங் கூறியுங்கேளாமையின், தக்ஷனைத் தலையிழக்க வென்றும், அங்குற்ற பிறதேவர்களைச் சூரனால் வருந்துகவென்றும், வேதியர்களை நீங்கள் விபூதி ருத்திராக்ஷ தாரணர்களாயிருந்துஞ் சிவபக்தி யற்றவர்களாகுகவென்றுஞ் சபித்த பெரியோர். இந்திரன் விருத்திராசுரனைக் கொல்வதற்குத் தன்கை வச்சிரம் வலியற்றதெனத் தெரிந்து திருமாலிடம் விண்ணப்பிக்க, அவர் "க்ஷீராப்தி மதன காலத்தில் அமரரும் அசுரரும் ஆயுதங்களை யிருக்கப் படாதென்று ததீசிமுனிவர் பால் வைத்தனர். அவற்றை ஒருவரும் மீண்டுங்கேளாமையின் அம்முனிவர் விழுங்க அவர்முதுகந்தண்டிற் சேர்த்துள்ளது. அதனைக் கேட்டு

மூன் அவர்கொடுப்பர்" என, இந்திரன் அங்ஙனமே யாசிக்க, தம்பிராணவாயுவை யெழுப்பிப் பிரமரந்திரவழியாக உடம்பை யகன்று, மூர்த்தி யடைந்தவர். இவ்வுலகில் புகழுடம்பை நிறுத்தியவர். ஒருகாலத்தில் சரசுவதிநதியில் இவர்வீரியம்விழ அதினின்றும் விருகூஷி தோன்றினன். (2) ஒரு ஆதிசைவவேதியர். சிவபக்தியிற் சிறந்தவர். தம்புத்திரன் சிவபூஜையிற் குறைசெய்து சித்தப்பிரமையால் வருந்துகையில், இறைவனை மிகுதியும் பிரார்த்தித்து அத்துயரை யொழிப்பித்தவர்.

தத்தகன்—பாதமெனும் வடமொழிக் காவியஞ்செய்த மாகன்பிதா.

தத்தன்—சீவகன்புதல்வரிலொருவன்

தத்தாத்திரேயர் — அத்திரிக்கு அநசூயையிடம் பிறந்தவர். இவரை விஷ்ணு அமிசமென்பர்.

தத்துவப்பிரகாசம்— சித்தாந்த நூல்களிலொன்று.

தத்துவப்பிரகாசர்—தத்துவப்பிரகாசமெனுஞ் சித்தாந்தநூலாசிரியர்.

தத்துவராயர்—வீரையென்னு மூரில் அந்தணர்குலத் துதித்தவர். இவரும் சொரூபானந்த ரென்பவரும் வடமொழி தென்மொழி வல்லுநர்களாய்ச் சற்குருவைத் தேடப்புறப்பட்டு, முன்னே குருவைத் தேடுபவர் மற்றையோர்க்குக் குருவாவதெனு நியமம் செய்து கொண்டு, சொரூபாநந்தர் தெற்கிலும், இவர் வடக்கிலுஞ்செல்ல, சொரூபானந்தர் குருவையடைந்து ஞானநூல்களைக் கற்று உண்மை யுணர்ந்தவர். தத்துவ ராயர் சொரூபானந்தரை நியமனப்படி குருவாகக் கொண்டு அவர்பால் ஞானநூல்களைப் பயின்று தமக்குள்ள கவிசெய்யும்வன்மையால், சசிவர்ணபோதம் பாடுதுறை தத்துவாமிர்தம் சிவப்பிரகாசவெண்பா ஞானவிநோதன் கலம்பகம் அமிர்தசாகரவெண்பாநெஞ்சுவிடுதூது கலிமடல் கலித்துறையந்தாதி மோகவதைப்பரணி முதலியபலநூல்களைப் பாடியவர் இவர் மகாஞானிகளி லொருவர்.

தத்தை—ஜம்பன் புத்திரி. இரணியகசிபன் மனைவி.

தநுஜாள்—காசிபர்க்குத் தோன்றிய ஒருவகை யசுரர்.

தநூர்வேதம்— உபவேதம் நான்கனுளொன்று. யசுர்வேதச் சார்பாயுள்ளது.

தந்தகாதகன்— ஒரிராக்கதன். அரிச்சந்திரனை மாயஞ்செய்ய விசுவாமித்திரராற் படைக்கப்பட்டவன்.

தந்தவக்திரன்—இடையெழுவள்ளல்களிலொருவன். விருதசர்மன் புத்திரன். இவன்தாய் வசுதேவன்தங்கையாகிய சுருததேவி. இவன்கண்ணனாற் கொல்லப்பட்டவன். விஷ்ணுவின் துவாரபாலர்களாயிருந்து சபிக்கப் பட்டவர்களில் ஒருவன். மற்றையோன் சிசுபாலன்.

தந்திரிபாலன்—அஞ்ஞாதவாச காலத்தில் சகதேவன் கொண் டிருந்த பெயர்.

தந்துமாரன் — சங்கவருண ரெனும் நாகரிகராற் பாடப்பெற்றஒருபிரபு.

தபதி—சூரியன் மகள். சம்வருணன் மனைவி. இவன்மகன் குரு.

தபனன்—சூரியன்.

தபன்—அக்கினி. அங்கிரசன் மரபி

னுதித்த காசிபன் வாசிட்டன்பிராணன் அங்கிரசன் சியவனனெனும் ஐவர்க்கும்பிறந்த பாஞ்சசன்னியன்.

தப்தகும்பம்—ஒரு நரகம். மிகுதியுங் காச்சப்பட்ட எண்ணெயையுடையது. யமதூதர் மகா பாவிகளை இதில் தலைகீழாக அமிழ்த்தி யெடுப்பார்கள்.

தமசு—அந்தகார மிகுந்துள்ள ஒரு [நரகம்.

தமசை—ஒருநதி. இருக்ஷ பர்வதத்திலுள்ளது.

தமயந்தி—விதர்ப்பராசனாகிய வீமன் மகள். நிடதநாட்டரசனாகிய நளன் மனைவி. மகன் இந்திர சேனன். மகள் இந்திரசேனை. இவள் பூர்வஜன்மத்தில் ஆகுகியெனப்படுவள், அவ் வரலாற்றினை ஆகுகனிலும், தமயந்தியைப் பற்றிய விடயங்களை நளனிலுங் காண்க.

தமலிப்தர்--கங்கையின்மேற்கிலுள்ள தேசத்தர்கள்.

தமனிகை—ஓரப்சரசு. மேநகைமகள். பக்ஷிவரன்மனைவி. தாரிக்ஷிதாய்.

தமிழ்—பதினெண்பாஷைகளி லொன்று. குணகடல் குமரி குடகம் வேங்கடமெனு நான்கெல்லைக்குட்பட்ட தேசத்தில் வழங்குவது. இது தென்மொழியென்றும், திராவிடமென்றும் பெயருறும். இப்பாஷையின் மேம்பாடும் அருமைபெருமையும்விளக்கற்கிட மிந்நூலன்று. ஆயினும் வடமொழியாகிய அச் சம்ஸ்கிருதத்திற்கு நிகரானமொழியாகலின் அதற்கேற்பத் தென்மொழியென வழங்குவதும், சைவசமயாசாரியர்களாகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் முதலியோர் இத்தமிழ்ப்பாஷையில் திராவிடவேத மோதி யெண்ணிறந்த அற்புதங்களியற்றியதும், வைணவமத ஆழ்வார்கள் தம்மரபிற்குச் சிறப்பினைச் செய்யும் நாலாயிரப் பிரபந்த மியற்றியதும்; முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானும் சங்கப்புலவருளொருவரா யிருந்து தமிழாய்ந்ததுமே இதற்குப்போதுமான சாக்ஷியாம். இனி இத்தமிழ் இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழென மூவகைப்படும். அன்றியுங் கொடுந்தமிழ் "தென்பாண்டி குட்டங் குடங் கற்கா வேண் பூழி, பன்றி யருவா வதனைடக்கு—நன்றாய, சீதமலாடு புனனாடு" எனுமிடங்களில் வழங்கும்-இப்போது இலங்கையாகிய ஈழநாட்டிலும், பர்மா, சிங்கப்பூர், ஜாவாமுதலிய பலவிடங்களிலும் பிரபலமாக வழங்கப்படு பாஷைகளிலொன்றாம். சிவபெருமான் வடமொழியைப் பாணினிக்கு ஒருகாலத்திற் கூறியதுபோலவே, அகத்தியர் தென்னாட்டை யடையவேண்டி சேர்ந்த காலத்தில், அத்தேசபாஷையெனக்குப் புலப்படுமா றருள்புரிகவென் றிரக்க, அக்குறுமுனிக்குச் சிவபெருமான் தமிழின் பாஷாஞானத்தையுண்டு செய்தனுப்பினர். ஆகலின் அவர் தென்னாடடைந்தபின், தம்மொடுவந்த அரசிளங்குமாரரையும் வேளிரையும்தமிழ்பயில்வாராக்கிக் காடுதிருத்தி நாடுகண்டு சங்க நியமித்துத் தம்பெயரால் முத்தமிழிலக்கணஞ் செய்தனரே யன்றி தமிழ்ப்பாஷையை யகத்தியனாரே யுண்டுசெய்தனரென்போர் கூற்று ஒருதலைதுணிவாம். இனி, [illegible]

ஆரியத்தின் றிரிபென்பார் ஒருசாரார். அதுவும் ஒவ்வாமையாம். ஆயின் வடசொற்கள் இதில் விரவப்பட்டுளவே யெனின், இக்காலத்து ஆங்கில வார்த்தைகள் நம் சம்பாஷணையில் மிக்குவழங்குதல் காணப்படுவதன்றோ நாளடைவில் அம்மொழிகள் இலக்கியங்களில் நுழைந்துவிடின் ஆங்கிலயத்தினின்று தமிழுதித்ததாமோ. இவ்விஷயங்கள் இங்குவிரிக்க இடமின்று.

தருமஷ்டரி — சுக்கிரன் புதல்வியரிலொருத்தி.

தயாளமலர்க்குழலம்மை— திருக்கடவூர்மயானத்தில் உமாதேவியாருக்குரிய திருநாமம்

தரணி—(1) பரசுராமன் மனைவி. (2) சிவகன் புத்திரரிலொருவன்.

தரன்—(1) யதுமரபினன். அநுபுத்திரன். இவனுக்கு அந்தகனென்னும்பெயர். (2) கலுழவேகனிடத்துள்ள ஒருவித்தியாதரன். கப்பல் முழுகியதுபோல மாயஞ் செய்து ஸ்ரீதத்தனைக் கலுழவேகன்பால் அழைத்துச் சென்றவன் (3) அஷ்டவசுக்களி லொருவன்.

தரிசன் — தாசாவுக்குச் சினிவாலியிடமுதித்த புத்திரன்.

தருநிலை—கர்பகத்தருநிற்குங் கோயில். காவிரிப்பூம் பட்டினத்துள்ளது. [மணி]

தருமகோபன்—சூரபன்மன் மந்திரி. வீரவாகுதேவராற் கொல்லப் பட்டவன்.

தருமசக்கரம்—அறவாழி.

தருமசாவகன்—நாகபுரத்தருகே ஒரு சோலையி லிருந்த பௌத்த முனிவன். இவன் புண்ணியராசனுக்குத் தருமோபதேசஞ் செய்தவன்.

தருமதத்தன்—(1) காவிரிப்பூம்பட்டினத்துள்ள ஒருவணிகன். மதுரை சென்று பெரும்பொருளீட்டி எட்டிப்பட்டம் பெற்றவன். இறக்கும் வரையில் மணமின்றிப் பிரமசாரியாயிருந்தவன் [மணி] (2) சச்சந்தன் மந்திரி. [சீவக]

தருமபுத்திரன்—(1) தருமராஜனிற் காண்க (2) புறநானூற்றிற் காணப்படும் ஓரரசன். கோதமனாரெனும் புலவராற் பாடப்பட்டவன்.

தருமபுரேசர்—திருநள்ளாற்றிற் சிவபிரானுக்குவழங்குந் திருநாமம்.

தருமர்—(1) திருக்குறளுக் குரையிட்ட பதின்மரு ளொருவர். (2) ஜைனமதஸ்தாபகரான இருபத்து நான்கு தீர்த்தங்கரரி லொருவர்.

தர்க்கசங்கிரகம்—அன்னம்பட்டரால் வடமொழியிற் செய்யப்பட்டதொரு நியாயசாத்திரம். இது சிவஞான யோகிகளால் மொழி பெயர்க்கப் பட்டுளது. அன்னம் பட்டியத்திற் காண்க.

தர்மதர்சி— புத்தர்களில் பதினெட்டாவதாகத் தோன்றியவர்.

தர்மநேத்திரன்—ஹேஹயன்மகன்.

தர்மபக்ஷிகள் — பிங்காக்ஷன் விபோதன் சுபுத்திரன் சுமுகியெனும் நான்குபக்ஷிகள். விபுலமுனி மைந்தரான சுகுருசன் தும்புரனென்போரில், சுகுருசனிடம் இந்திரன் பக்ஷிவடிவேற்றுச்சென்று, எனக்கு நரமாமிசந் தருகவெனக் கேட்ப, சுகுருசன் தன் புதல்வர் நால்வரையும் பார்த்து உங்களி லொருவன் இவருக் கிரையாகவென்ன ஒருவரு

முடன்படாது தடுத்தமையின், சுகுருசன் பெருண்டு நீங்கள் பக்ஷிகளாருகவெனச் சபிக்கப்பெற்று இவ்வுருவேற்றவர். இவர்களே ஜைமினிக்குற்ற சந்தேகத்தை விலக்கியவர்கள் மார்க்கண்டேய புராணம் இவ்விடயத்தை விரிதக்கூறும்.

தர்மம் சரணங் கச்சாமி—ஒருபௌத்தமந்திரம். தருமத்தைச்சரணமாக அடைகிறேனெனபது பொருள்.

தர்மரதன்—சித்திரரதன் மகன்.

தர்மராஜன்—சதுதியவந்தன். பாண்டு புத்திரரைவரில் ஜேஷ்டன். இவனதாய் குந்திதேவி. பாண்டுவுக்குற்ற சாபததால் அவன் மனைவியோடு சேராளுக, குந்திதனககுத துர்வாச ரனுக்கிரகித்த மந்திர சததியால் இயமன் பிரசாதமாகப் பெற்ற குமாரன். இவனுக்கு யுதிஷ்டிரனென்றும் பெயா. இவனுக்குத திரௌபதியிடம் பிறந்த மகன்பிரதிவிந்தியன்.

தர்மவியாதன்—ஒரு வனசரன். மிதிலாநகரத்தவன. குருபக்திமுதலிய சீலங்களை யுடையவன். மாமிசம் விற்பதே தொழிலாகக் கொண்டவன். வேதியனுயிருந்துசாபத்தால் இப்படிஜனித்தவன். கௌசிகனெனும் ஒரக்தணனுக்குத் தத்துவோபதேசஞ் செய்தவன்.

தர்மவிரதன்— தண்டகாரணியத்தில் இராமர் சென்ற பொழுது அவரைக்கண்ட ஒரிருடி.

தர்மஷணன் — சிருஞ்சயன் இரண்டாம்புத்திரன்.

தர்மன்—(1) பிரமகன் பெற்ற ஒரு தேவதை. இத்தேவதைக்குச்சமன் காமன் ஹர்ஷனெனும் புத்திரர் மூவர். 2) பிருது சிரவன் மகன் (3) தர்மராஜன்.

தர்மாரணியம் — ஒரு நகரம். குசன் புத்திரரிலொருவனன ஆர்த்தரஜனுல் நியமிக்கப்பட்டது.

தலன்—சலன்தம்பி.சலனிற்காண்க.

தலாதலம்—காலநேமிமுதலியஅசுரர்கள் அரசுபுரியும் ஒருஅதோலோகம்

தலைச்சங்கநாண்மதியம்—காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம்.

தலைச்சங்கம்—இது முதற்சங்கமெனவும்படும். இது தென் மதுரையில் காய்சினவழுதியால் தாபிக்கப்பட்டது. இதனைக்குறித்தவிடயங்களை

" வேங்கடங் குமரி தீம்புனற் பௌவத், திந்நான் கெல்லையினிருந்தமிழ் பயின்ற, செந்நாப் புலவர் செய்தியீண் டுரைப்பின், ஆடகக்குடுமி மாடக்கூடலின், முன்னர்ச் சங்கக் கன்மாப் பலகையில், திரிபுரமெரித்த விரிசடைக் கடவுள், மன்றன் மராத்தார்க் குன்றெறி யிளஞ்சேய், திண்டிறற் புலமைக் குண்டிகைக் குறமுனி, புவிபுகழ் மருதங் கவினிய முரஞ்சிப், பனிமுடி நாகன் நிதியின் கிழவ, னினையர் நானூற்று நாற்பத் தொன்பதின்மர்,—

" அனையர் காஞன் காயிர நாற் றொடு, நாற்பத்தொன் பதின்மர் பார்க்கிற் செந்தமிழோர், புரிந்தன செய்யுட் பெரும்பரி பாடலும், முதுமையடுத்த நாரையுங் குருகும், கதியுறச் செய்த களரியா விரையும், ஆங்கவ ரிருந்தது மத்தொகை யாகும்,—

" ஈங்கிவர் தம்மையிரீஇயபாண்

டியர்கள், காய்சின வழுதிமுதற் கடுங்கோ னீறு, ஏசிலாவகை யெண்பத்தொன் பதின்மர், கவியரங் கேறினு ரெழுவ ரென்பும், மகரத்துவ முடைய வகத்திய மிலக்கணம்''— எனும் ஆசிரியத்தா னுணர்க. விரிப்பிற் பெருகும்.

**தலைச்செங்காடு**—காவிரியின் தென் கரையிலுள்ள ஒரு சிவ ஸ்தலம். (சங்கநாதேசர் சௌந்தரியம்மை. வில்வ விருக்ஷம்.) மாடலனெனும் வேதியனூர். [சில] காவிரிப்பூம் பட்டினத்தருகிலுள்ளது.

**தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்**— இளமையிலே தலையாலங்கானத்தில், கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேர லிரும்பொறையுடன் பொருது அவனைச் சிறையிட்டவன். திதியன் எழினி எருமையூரன் இளங்கோவேண்மான் பொருநனென்போரை வென்றவன். வேள்எவ்வியின் மிழலைக் கூற்றத்தையும், பழையவேளிருடைய முத்தூர்க்கூற்றத்தையுங் கைக்கொண்டவன். செய்யுள செய்தலிலும் போர்புரிதலிலும் வல்லவன். பத்துப்பாட்டிலொன்றான மதுரைக் காஞ்சிக்குத் தலைவன். இவன் நெடுஞ் செழியனெனவும் படுவன். இவனைப் பாடியபுலவர்கள் குடபுலவியனார் கல்லாடனார் மாங்குடிகிழார் இடைக்குன்றூர்கிழார் முதலினோர். [புறநா]

**தலையாலங்கானம்**— நெடுஞ் செழியனென்னும் பாண்டியன் பகைமன்னரோடு பெரும்போர்புரிந்துவெற்றிகொண்ட இடம்.

**தவளமால்வரை**—சாவக நாட்டிலுள்ள ஒருமலை. [மணி]

**தவித்திரோதன்**—யதுமரபினன். துந்துபிமகன். அபிஜித்தனென்றும் பெயருடையான்.

**தற்புருஷம்**—சிவபிரான் ஐந்து திருமுகங்களி லொன்று. கிழக்கு நோக்கியதும், பசுமை நிறமுடையதுமாம்.

**தனஞ்சயன்**— (1) அர்ச்சுனன் பரியாயநாமங்களி லொன்று. இராசசூயஞ்செய்கையில், உத்தர குருகண்டத்திற்சென்று, தேவ சித்த கந்தர் வாதியரை வென்று, எண்ணிறந்த பொருட்குவையைக்கவர்ந்து மகமேருபோற் குவித்தமையின் இப்பெயர்வழங்கும். (2) அக்கினி (3) தனஞ்சயமெனும் வடமொழி நிகண்டு செய்த புலவன். (4) மணவூரிலிருந்த ஒருவணிகன். இவனே கடம்பவனத்திருந்த சொக்கலிங்கப்பெருமானை முதலிற்றறிசித்துப் பாண்டியனுக் குணர்த்தி, அவனால் திருநகரங் காண்டற்குக் காரணமா யிருந்தவன் (5) தசவாயுக்களிலொன்று. உயிர்போயினும் போகாது உடலை வீக்கித் தலையைக்கிழித்துச் செல்லுந் தகைமையுடையது

**தனபதி**—(1) குபேரன் (2) காரைக்காலம்மையார் கணவன் (3) பதுமைபிதா [சீவக]

**தனபாலன்**—பதுமுகன் தந்தை.

**தனிகன்**—யதுமரபினன். துர்த்தமன் மகன். கார்த்த வீரியார்ச்சுனன் பாட்டன்.

**தனிப்பாடற்றிரட்டு**—பல வித்துவான்களால் அவ்வவ்வமயங்களி லியற்றப்பட்ட தனிக்கவிகளை ஒருசே